# أ إلٰه واحد؟
# أم
# آلهة متعددون؟

# ஒரு தெய்வமா? பல தெய்வமா?

ஆசிரியர்:

கலைமாமணி அப்துல்லாஹ் அடியார்

(அல்லாஹ்வின் கருணை அவர்கள் மீது நிலவட்டும்!)

DARUL HUDA

# உள்ளே...

# பதிப்புரை

அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்!

இந்நூலை வாசிக்கின்ற எல்லா வாசகர்களுக்கும் அல்லாஹ் நேர்வழி காட்டுவானாக! ஆமீன்.

இஸ்லாமின் ஏகத்துவக் கொள்கையை எடுத்துச் சொல்கின்ற எத்தனையோ பல நூல்கள் இருந்தாலும் மர்ஹூம் கலைமாமணி அப்துல்லாஹ் அடியாரின் இந்நூல் அவற்றில் தனித்து நிற்கிறது.

காரணம்: இந்தியாவின் சிலை வணக்க வழிபாடுகளில் ஊறிப்போன மக்களுக்கு அவர்களில் இருந்தே உருவான, அவர்களை நன்கு புரிந்த ஒரு மனிதர்தான் இந்நூல் ஆசிரியர். பின்னர், அவர் தூய இஸ்லாமையும் அதன் ஓரிறைக் கொள்கையையும் மனமார ஏற்று, தமது மக்களை அந்தக் கொள்கைக்கு அழைப்பதுதான் இந்நூல்.

திரு குர்ஆனின் ஏகத்துவ வசனங்களை நன்கு படித்து, புரிந்து, உணர்ந்து, இடத்திற்கு ஏற்ப வசனங்களை தேர்வு செய்து கருத்துக்களை பதிவு செய்து இருக்கிறார் ஆசிரியர் அப்துல்லாஹ் அவர்கள். ஆசிரியரின் இப்பணியை அல்லாஹ் ஏற்றுக் கொள்வானாக! அவர்களுக்கு சொர்க்க வாழ்க்கையை அருள்வானாக! ஆமீன்.

இந்நூலை மேலாய்வு செய்து, அழைப்புப் பணிக்காக வெளியிடுவதற்கு அனுமதியும் ஒத்துழைப்பும் தந்த இந்நூலின் வெளியீட்டாளர் பஷாரத் பப்ளிஷர்ஸ் உரிமையாளர்களுக்கு அல்லாஹுத் தஆலா இம்மையிலும் மறுமையிலும் நற்கூலிகளை வழங்குவானாக! ஆமீன்!

ஆசிரியரின் இந்நூலை நாங்கள் பல முறை படித்தோம். பின்னர், இந்நூலை வாசிக்கின்ற எல்லோரும் இலகுவாக புரிவதற்காக எழுத்து நடையில் தேவையான திருத்தங்கள் செய்தும் மேலாய்வு செய்தும் இந்நூலை வெளியிடுகிறோம்.

இப்பதிப்பு அழைப்புப் பணியில் இலவச விநியோகத்திற்காக வெளியிடப்படுகிறது.

அல்லாஹ் எங்கள் பணியை ஏற்றுக் கொள்வானாக! இந்நூல் மூலம் பல்லாயிரம் மக்கள் தொடர்ந்து பலன்பெறவும் நேர்வழி பெறவும் அல்லாஹ் அருள்புரிவானாக! ஆமீன்.

பதிப்பாசிரியர்கள்
தாருல் ஹுதா.

# அப்துல்லாஹ் அடியார்
# ஓர் அறிமுகம்

தமிழ்நாட்டின் தொழில் நகரமான திருப்பூரில் 1935ம் ஆண்டு மே மாதம் 16ம் தேதி பிறந்தார். இவருடைய இயற்பெயர் தண்டபாணி.

அங்கு தனது ஆரம்பக் கல்வியையும் பிறகு கோயம்புத்தூரில் உயர் கல்வியையும் கற்றார். விவசாயத்தையும் தொழிலாளர்களையும் மிகவும் நேசித்தார். இவர் ஆரம்பத்தில் ஒரு பரம நாத்திகராக (கடவுள் மறுப்பாளர்) இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆகவே, நீண்ட காலமாக நாத்தீக கொள்கையையும் திராவிட சிந்தனையையும் தமது எழுத்தாற்றலாலும் பேச்சாற்றலாலும் உலக அளவில் உள்ள தமிழ் மக்களுக்கு கொண்டு சேர்த்தார். சீரிய சிந்தனையும் சமூக அக்கறையும் கொண்ட அவர் பல பத்திரிக்கைகளில் கதை, கவிதை மற்றும் விழிப்புணர்வு கட்டுரைகளையும் எழுதியுள்ளார். 120 நாவல்கள், 13 நாடகங்கள், 13 புத்தகங்கள் பல தினசரி, வார இதழ்களில் முற்போக்கு சிந்தனைக் கட்டுரைகளையும் எழுதியுள்ளார்.

அரசியலிலும் அவர் தீவிர ஈடுபாடு கொண்டவர். திராவிட இயக்கங்களில் தன்னை இணைத்துக் கொண்டு மிகவும் ஆர்வத்துடன் சமூக நலப் போராட்டங்களில் கலந்து கொண்டார். குறிப்பாக 1975ம் ஆண்டு இந்திரா காந்தி பிரதமராக இருந்த சமயத்தில் அவசர கால நிலையை இந்தியா முழுவதும் சந்தித்தது. அந்த நேரத்தில் அவரும் சக தோழர்களுடன் சிறையில் அடைக்கப்பட்டார். சிறையில் பல கொடுமைகளுக்கு ஆளானார். அவரது வயிற்றில் பல காயங்கள் ஏற்பட்டு அதனால் சிரமத்திற்குள்ளானார்.

**1982ம் ஆண்டு தமிழக அரசின் உயரிய விருதுகளில் ஒன்றான “கலைமாமணி” என்ற விருதையும் பெற்றார்.** தமிழகத்தின் பிரபல தலைவர்களின் அன்புக்கும் பாசத்திற்கும் உரியவராகத் திகழ்ந்தார். முன்னாள் தமிழக முதல்வர் அறிஞர் அண்ணாதுரைக்கு மிகவும் பிடித்தமானவராக விளங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.

அவசர நிலைக் காலத்தில் (எமர்ஜென்சி) கைது செய்யப்பட்டு சிறையில் இருக்கும்போதே இஸ்லாமைப் பற்றி அதிகம் படிக்க ஆரம்பித்தார். தான் படித்த அந்த விசயங்களை தமது எழுத்தின் மூலமாகவும் பேச்சின் மூலமாகவும் பிற மக்களுக்கும் எடுத்துச் சொல்ல அவர் தவறியதில்லை.

அவர் சிறையில் இருந்து விடுதலையான பிறகு இஸ்லாம் மீதான அவரது தேடல் மேலும் அதிகமானது.

1977ம் ஆண்டு **“நீரோட்டம்”** என்ற பத்திரிக்கையை ஆரம்பித்தார். அதில் இஸ்லாம் சம்பந்தமான தனது கருத்தையும் தெளிவுபடுத்தினார். பொருளாதாரப் பிரச்சினையால் நீரோட்டம் என்ற பத்திரிக்கை இடையிலேயே நின்றுவிட்டது. மேலும் அவர் “முரசொலி”, பத்திரிக்கையில் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

அவர் எழுதிய நூல்களில் **“நான் காதலிக்கும் இஸ்லாம்”** என்ற நூல் மிகவும் பிரபலமானது. அந்நூல் தமிழ் அல்லாத பிற மொழிகளிலும் குறிப்பாக மலையாளம், தெலுங்கு, உருது, ஹிந்தி, மராத்தி, சிந்தி ஆகிய மொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. இந்நூலைப் படித்து பலர் இஸ்லாமை ஏற்றார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

அவருடைய, **“நான் காதலிக்கும் இஸ்லாம்”** என்ற நூலை 1983ம் ஆண்டு பாகிஸ்தானில் சிந்தி மொழியில் வெளிடப்பட்டது. அன்றைய ஜனாதிபதி ஜியாவுல் ஹக் அவர்களுடைய

அழைப்பின் பேரில் அந்நூல் வெளியீட்டு விழாவில் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார்.

அதில் தமக்கு வெளிநாட்டு அமைச்சர்களுக்கு வழங்கப்படுகின்ற கண்ணியத்தைப் போன்று கௌரவிக்கப்பட்டது என அவர் தாயகம் திரும்பியதும் பெருமிதத்தோடு நினைவு கூர்ந்தார்.

உத்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு ஜமீன்தார் இந்நூலைப் படித்து, அவருடைய தீவிர வாசகரானார். இந்நூலில் உள்ள இஸ்லாமிய கருத்தினால் ஈர்க்கப்பட்டு, இந்தியாவின் வடக்கில் இல்லாத ஒரு ஆசிரியர் தெற்கில் தோன்றிவிட்டார் என்பதை உணர்ந்த அவர், அடியாரைக் காண பெரும் ஆவல் கொண்டார்.

1987ம் ஆண்டு ஒரு நாள் திடீரென சென்னையில் உள்ள அடியாரின் வீட்டிற்கு அந்த ஜமீன்தார் வருகை தந்தார். ஆசிரியரின் கோலத்தைப் பார்த்ததும் அந்த ஜமீன்தார் பெரும் அதிர்ச்சி அடைந்தார். காரணம் அவரது மேஜையில் விஸ்கி பாட்டிலும் அவரது கை விரல்களில் சிகரட்டும் இருந்தன. இந்த கோலத்தைக் கண்டுதான் ஜமீன்தார் அதிர்ச்சி அடைந்துள்ளார்.

ஆசிரியரின் வரவேற்பை பெற்றுக் கொண்ட ஜமீன்தார் நான் தங்களின் நான் காதலிக்கும் இஸ்லாம் என்ற நூலைப் படித்து இஸ்லாமையும் இஸ்லாமில் கூறும் ஒழுக்க மாண்புகளையும் அறிந்து கொண்டேன். அதை என் வாழ்வில் நடைமுறைப்படுத்த திட்டமிட்டுள்ளேன். இஸ்லாமிய கருத்துக்களை வடக்கே எங்கள் பகுதியில்கூட இவ்வளவு அழகி முறையில் இதுவரையில் யாரும் எழுதியது இல்லை. தங்கள் பணிகள் தொடர வாழ்த்துகள் எனக் கூறி விடைபெற்றார் ஜமீன்தார்.

ஜமீன்தாரின் பேச்சையும் அவரது முக பாவணையும் பார்த்துக் கொண்டு இருந்த அடியார் அவர்களின் உள்ளம் நடுங்கியது, கண்கள் குளமாயின. அன்றைய இரவில் இருந்து அடியார்

மிகவும் கவலைக்குள்ளானார். அவரின் மனசாட்சி உறுத்த ஆரம்பித்தன.

தான் எழுதிய இஸ்லாமிய கருத்துக்களை பிறர் படித்து திருந்தும் போது நமது வாழ்வில் இன்னும் ஏன் மாற்றம் வரவில்லை என மனதில் பெரும் கவலை தோன்றியது.

இஸ்லாமில் மட்டுமே உண்மையான இறைவனின் வழிகாட்டுதல் இருக்கின்றது என்பதை அறிந்து, அல்லாஹ் ஒருவன்தான் வணங்குவதற்கு தகுதியானவன் என்பதையும் இஸ்லாமிய மார்க்கம் கண்டிப்பான ஒழுக்கத்தையும் வாழ்க்கை நெறியையும் போதிக்கிறது என்பதையும் விளங்கிக் கொண்டார்.

**அல்லாஹ்வின் அருளால் 1987ம் ஆண்டு ஜூன் மாதம் 6ம் தேதி சென்னை மண்ணடி அங்கப்பன் தெருவில் உள்ள மஃமூர் பள்ளிவாசலில் பலர் முன்னிலையில் ஷஹாதா கூறி இஸ்லாமை ஏற்றார்.**

இஸ்லாத்தில் இணைந்த அவர் தாம் ஏற்ற கொள்கையில் கடைசி வரை மிக உறுதியாக இருந்தார். இஸ்லாம்தான் இரட்சிப்பின் மார்க்கம். இஸ்லாமின் மூலமே மக்கள் நேர்வழி பெற முடியும் என்ற ஏகத்துவ பிரச்சாரத்தை தமிழகம் மட்டுமல்ல உலகளவில் உள்ள தமிழ் மக்களுக்கு எடுத்துரைத்தார்.

அவருடைய இஸ்லாமிய அழைப்பை கிட்டத்தட்ட அறுபது இலட்சம் மக்கள் கேட்டிருக்கிறார்கள் என்ற தகவலை அறிய முடிகிறது.

தமிழ் பேசும் மக்கள் வாழும் வெளிநாடுகளில் குறிப்பாக இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, இலண்டன் ஆகிய நாடுகளுக்குச் சென்று பல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு இஸ்லாமிய மார்க்கப் பிரச்சாரம் செய்தார்.

அடியார் அவர்கள் இஸ்லாம் சம்பந்தமான பணிரெண்டு நூற்களை எழுதியுள்ளார். அதில் நான் காதலிக்கும் இஸ்லாம், திருக்குர்ஆனின் உள்ளடக்கம் என்ன?, அழைப்புப் பணி ஏன்? எப்படி? ஆகிய நூல்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவையாகும்.

தமது வாழ்நாள் முழுவதும் இஸ்லாமிய அழைப்புப் பணியில் மிகவும் ஆவலுடன் ஈடுபட்டார். அவர் தஃவா சென்டர் (இஸ்லாமிய அழைப்பு மையம்) ஒன்றை துவக்கி அதன் மூலம் பல மக்களுக்கு இஸ்லாமிய கருத்துக்களை எடுத்துரைத்தார். அதன் மூலம் பலர் இஸ்லாமை ஏற்றனர்.

தஃவா பணியில் ஈடுபட்ட காலத்தில் இந்திய உளவுத்துறை அதிகாரிகளால் பல முறை விசாரிக்கப்பட்டிருக்கிறார். இஸ்லாமிய விரோத சக்திகள் அவரை மிரட்டின. “இஸ்லாம் என்னை ஈர்த்தது.” “நான் பெற்ற இஸ்லாமை எனது சகோதர சகோதரிகளுக்கு எடுத்துரைப்பது எனது கடமை.” எனவே, எந்த மிரட்டல்களுக்கும் நான் அஞ்சப்போவதில்லை. என மிக துணிச்சலுடன் எடுத்துரைத்தார்.

அடியார் அவர்களின் இஸ்லாமிய கருத்துக்களைக் கேட்ட பலர் அல்லாஹ்வின் அருளால் இஸ்லாமை ஏற்றனர். அவர்களில் கம்யூனிச சிந்தனையாளரும் தமிழக கம்யூனிஸ்ட் கட்சியில் முக்கிய பொறுப்பாளருமான கொடிக்கால் செல்லப்பா என்பவர் தன்னை இஸ்லாமில் இணைத்துக் கொண்டு கொடிக்கால் சேக் அப்துல்லாஹ் என்றும், அம்பேத்கர் கழகத்தின் முக்கிய பொறுப்பாளரான வீரபுத்திரன் என்பவர் தன்னை இஸ்லாமில் இணைத்துக் கொண்டு முஹம்மது பிலால் என்றும் தங்கள் பெயர்களை மாற்றிக் கொண்டனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களில் பலர் இஸ்லாமிய அழைப்பாளர்களாகவும் இருந்தனர்.

அப்துல்லாஹ் அடியார் தனது இறுதி நாட்களில் (சுமார் ஒரு

வருடமாக) பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டார். அந்நிலையிலும் அவருடைய தஃவா பணிகள் குறையவில்லை.

அப்துல்லாஹ் அடியார் அவர்களைத் தொடர்ந்து, அவருடைய மனைவி, மகள், இரு மகன்கள், ஆகியோர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார்கள்.

அல்லாஹ்வின் நாட்டப்படி 1996ஆம் ஆண்டு செப்டம்பர் 20ம் தேதி சென்னை கோடம்பாக்கத்தில் அவர் மரணமடைந்தார். அவருடைய ஜனாஸா கோடம்பாக்கம் ஜுமுஆ பள்ளிவாசலில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

அல்லாஹ் அவரை மன்னித்து அவருடைய சேவையை பொருந்திக் கொள்வானாக! மறுமையில் ஜன்னத்துல் ஃபிர்தவ்ஸ் எனும் சொர்க்கத்தில் அவரை சேர்ப்பானாக!

Courtesy: Impact International, London. Muslimedia – March 1-15, 1997
Source: https://vapuchi.wordpress.com

# ஒரு தெய்வமா? பல தெய்வமா?

ஒரு தெய்வமா? பல தெய்வமா? என்பது குறித்த வாத விவாதங்கள் ஞான வெளிச்சத்தை ஏற்படுத்தும். அது பற்றிய கேள்வி பதில் பகுதியும் விளக்கங்களும் வருமாறு:

> **கேள்வி:**
> இஸ்லாம் கூறுகின்ற இறைக் (கடவுள்) கொள்கைக்கும் மற்ற மார்க்கங்கள் கூறுகின்ற இறைக் கொள்கைக்கும் என்ன வேறுபாடு?

**பதில்:** ஒரே இறைவன்தான் என்பதை ஐயம் - திரிபு - கசடு கலப்பு இல்லாமல் இஸ்லாம் கூறுகிறது. மற்ற மார்க்கங்கள் பல தெய்வங்களைப் பற்றிய அருமை பெருமையைக் கூறுகின்றன. அவற்றை வணங்குவதையே கடைப்பிடிக்கின்றன.

ஆனால், உலகம் உட்பட அண்ட சராசரத்தைப் படைத்து உணவளித்து, பரிபாலித்து, பாதுகாப்பது, இந்தப் பல தெய்வங்களில் எந்தத் தெய்வம்? என்று கேட்டால் பல தெய்வ வணக்கக்காரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் பதில் அளிப்பார்கள். ஒருவர் சொல்வதை மற்றவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

இந்தியாவிலுள்ள ஒரு மார்க்கத்தில் படைப்புக் கடவுளையே

படைத்தவன் இன்னோர் இறைவன் என்ற செய்தியும் வரும். ஆனால் அல்லாஹ் ஒருவனே படைப்பவன், உணவளிப்பவன், பரிபாலித்துப் பாதுகாப்பவன் என்று திருக்குர்ஆன் என்ற திருமறை ஓதும்.

**அவன்தான் (-அல்லாஹ்தான்) பூமியிலுள்ள யாவற்றையும் உங்களுக்காகப் படைத்தான். அவன் வானத்தைப் படைக்கக் கருதி அவற்றை ஏழு வானங்களாகவும் அமைத்தான். யாவற்றையும் அவன் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் 2:29)**

**அவனே வானங்களையும் பூமியையும் முன்மாதிரி இன்றியே படைத்தவன். அவன் எதை(ப் படைக்கக் கருதி) முடிவு செய்தாலும் அதனை ஆகுக (-குன்) எனக் கூறிய மாத்திரத்தில் உடனே அது ஆகிவிடுகிறது. (அல்குர்ஆன் 2:117)**

**வானங்களையும் பூமியையும் தக்க காரணத்தின் மீதே அவன் படைத்திருக்கிறான். (அல்குர்ஆன் 16:3)**

**அல்லாஹ்வே சகல பொருள்களையும் படைத்தவன்; அவனே சகலவற்றின் பாதுகாவலன். (அல்குர்ஆன் 39:62)**

**இந்த அல்லாஹ்தான் உங்களைப் படைத்து போஷித்துப் பரிபக்குவப்படுத்துபவன். பொருள்கள் யாவற்றையும் படைத்தவன். அவனைத் தவிர வேறு இல்லை நாயகன். ஆகவே (அவனை விட்டு) நீங்கள் எங்கு மிரண்டு ஓடுகிறீர்கள்? (அல்குர்ஆன் 40:62)**

ஓர் இறைவன்தான் என்பதற்கு இத்தகைய திருமறை சாட்சியங்கள் உண்டு. ஆனால் பல தெய்வ வணக்கம் செய்வோருக்கு அவர்களுடைய வாதத்தை மெய்ப்பிக்க ஏதாவது ஒரு திருமறை வேதம் உண்டா? அதில் இது போன்ற சாட்சியங்கள் வசனங்கள் உண்டா? இல்லை.

பல தெய்வ வணக்கம் செய்வோருக்கு அந்த வணக்கத்திற்கு ஆதாரமாக வேதம் ஏதாவது உண்டா? என்று திருக்குர்ஆனே கேட்கிறது.

**யாதொரு வேதத்தை இதற்கு முன்னர் நாம் அவர்களுக்கு கொடுத்திருந்து அதனை அவர்கள் இதற்கு ஆதாரமாக வைத்துக் கொண்டிருக்கின்றனரா? இல்லை! அவர்கள் கூறுவ தெல்லாம் "நாங்கள் எங்கள் மூதாதைகளை ஒரு வழியில் கண்டோம். அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே நாங்கள் நடக்கின்றோம்" என்பதுதான்.** (அல்குர்ஆன் 43:21, 22)

இதுதான் உண்மை! பல தெய்வ வணக்கம் செய்வோருக்குரிய ஆதாரமே, "எங்களது முன்னோர்கள் பல தெய்வங்களைக் கும்பிட்டார்கள்: நாங்களும் கும்பிடுகிறோம்-" என்பதுதான்.

ஆனால், அந்தக் கூற்றாவது உண்மையா? இல்லை! இவர்கள் கூறுகிற மூதாதைகள்- முன்னோர்களுக்கும் முற்பட்ட முன்னோர் ஒரே ஓர் இறைவனைத்தான் வழிபட்டார்கள். இடையில் வந்தவர்கள்தான் பல தெய்வ வணக்கத்தைப் புகுத்தி விட்டனர். எனவே, மூதாதைகள், முன்னோர்கள் வழியில் நடக்கிறோம் பல தெய்வங்களை வணங்குகிறோம் என்பதும் உண்மையல்ல!

எப்படி?

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த வரலாற்றைப் பார்த்தால்- அப்போது வணங்கப்பட்ட தெய்வங்கள் இப்போது இல்லை. இப்போது வணங்கப்படுகின்ற தெய்வங்கள் அப்போது இல்லை. புதுப்புது தெய்வங்கள் நாள்தோறும் தோன்றிக் கொண்டிருக்கின்றன. பல தெய்வங்கள் கும்பிடுவாரற்று* அவை இருந்த கோயில்கள் பாழ்பட்டு விட்டன என்பது அவர்களே கூறுகின்ற செய்தியாகும்.

.............................................

* அதை வணங்கக்கூடியவர்கள் இல்லாமல்

பல தெய்வ வணக்கம் செய்வோர் அவர்களுடைய கொள்கையில் உறுதியாக நிற்பவர்களா? அதுவும் இல்லை!

எடுத்துக்காட்டாக- இறைவனே இல்லை என்று கூறுகின்ற நாத்திக வாதிகளிடம் அவர்களை வாதாடுமாறு கூறுங்கள். இறைவன் உண்டு என்று வாதாடத் தொடங்கும் போது அவர்கள் எப்படித் தங்களது வாதத்தை தொடங்குவார்கள்?

“இந்தப் பூமியைப் படைத்தது யார்? அண்ட கோளங்களைப் படைத்தது யார்? உயிர்களுக்கு உணவளித்து, பரிபாலித்துப் பாதுகாப்பது யார்?” என்றெல்லாம் வினாக்களை அடுக்கி “இதை எல்லாம் செய்கின்ற- ஒரு பெரும் சக்தி உண்டல்லவா? என்றுதான் கேட்பார்கள்.

இதை எல்லாம் செய்கின்ற இரண்டு சக்தி உண்டு அல்லவா? மூன்று இறைவன் உண்டு அல்லவா? என்று கேட்க மாட்டார்கள்.

ஏனெனில், நாத்திகனையும் வாதத்தால் மடக்கி உண்மையை உணரச் செய்கின்ற சக்தி ஓர் இறைத் தத்துவத்திற்குத்தான் உண்டு. பல தெய்வத் தத்துவத்திற்கு இல்லை.

அந்தப் பல தெய்வ வணக்கக்காரர்கள் நாத்திகர்களிடம் கேட்கிற கேள்வியை அவர்களிடமே நாம் இப்போது திருப்பிக் கேட்டால் என்ன செய்வார்கள்?

**(நபியே!) நீர் அவர்களை நோக்கி வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு ஆகாரமளிப்பவன் யார்? (உங்களுடைய) பார்வைக்கும் கேள்விக்கும் உரிமையாளன் யார்? இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும் உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? (உலகின் எல்லாக்) காரியங்களையும் திட்டமிட்டு நிகழ்த்துபவன் யார்? என்று கேட்பீரானால் அதற்கு அவர்கள் அல்லாஹ் (-இறைவன்) என்றுதான் கூறுவார்கள். அவ்வாறாயின்**

**நீங்கள் அவனுக்குப் பயந்து வழிபட வேண்டாமா? என்று (நபியே) நீர் கேளும்! (அல்குர்ஆன் 10:31)**

இவையெல்லாம் திருக்குர்ஆன் - நபிகள் நாயகத்தைப் பார்த்து பல தெய்வ வணக்கம் செய்வோரிடம் கேட்கச் சொல்கின்ற கேள்விகளாகும். இந்தக் கேள்விகளுக்கு ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்த பல தெய்வ வணக்கம் செய்வோரும் பதில் கூற முடியவில்லை! இப்போதைய பல தெய்வ வணக்கத்தாரும் பதில் கூற முடியாது.

நடைமுறையில் கூட பல தெய்வ வணக்கத்தாருக்கு துன்பம் நேர்ந்தால், கொடுமை இழைக்கப்பட்டால், அவர்கள் என்ன கூறுகிறார்கள்?

"ஆண்டவன் ஒருவன் இருக்கிறான்; அவன் பார்த்துக் கொள்வான்" என்றுதான் கூறுவார்கள்; முறையிடுகிறார்கள். "ஆண்டவன் இரண்டு பேர் இருக்கிறார்கள்; இறைவன் ஐந்து பேர் இருக்கிறார்கள்; முறையிட்டால் கவனித்துக் கொள்வார்கள்" என்று கூறுவதில்லை! இதையே திருக்குர்ஆன் தனது பாணியில் கூறுகிறது.

**பின்னர், ஏதாவது ஒரு துன்பம் உங்களை தொட்டு விட்டால் அவனிடமே (அதை நீக்குமாறு) நீங்கள் முறையிடுகிறீர்கள்! (அல்குர்ஆன் 16:53)**

இன்னொரு விசித்திரமான - பல தெய்வ வணக்கக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒரே இறைவன் என்பதை கொள்கை அளவில் ஒப்புக் கொள்வார்கள். நடைமுறையில் பல தெய்வங்களை நம்புவார்கள்; தொழுவார்கள்.

- **ஒருவனே தேவன்!** (திருமந்திரம், திருமூலர்)

  **ஒன்றென்று இரு!**

**தெய்வம் உண்டென்று இரு!**

(பட்டிணத்தடிகளின் பாடல்கள்)

**ஒரு தெய்வம், உன்னையே**

**உளமாற ஏற்பேன்!**

இப்படிப்பட்ட பாடல்களை எல்லாம் பாடுவார்கள். ஆனால், நடைமுறையில் பல தெய்வங்களை வழிபடுவார்கள். எல்லா மதங்களும் இப்படிப்பட்ட கொள்கைக் குழப்பத்தில்தான் இன்று வரை உள்ளன. ஆனால், ஒரே இறைவன், ஒரே நாயன், என்பதில் இஸ்லாம் ஆட்டம் அசைவு அற்ற நிலையில் இருக்கிறது.

- கொள்கையிலும் ஓர் இறைவன்!
- நடைமுறையிலும் ஓர் இறைவன்! என்பதைத் தெளிவாக, திண்மையோடு உரைக்கிறது இஸ்லாம்.

பனிப்பாறை மிகுந்த துருவப் பிரதேசத்திலிருந்து - குறிஞ்சி எனும் மலை நாடாயினும்- ஆற்றுப் படுக்கைப் பகுதியாயினும் - கடலோரக் கரை ஊர்களாயினும் - கொடும் பாலை வெளியாயினும்- அங்கெல்லாம் எந்த முஸ்லிமை சந்தித்தாலும் “உங்களுக்கு எத்தனை இறைவன்? யார் அந்த இறைவன்?” என்று கேட்டால் - அவர்கள் அனைவரும் கொடுக்கிற ஒரு குரல் - ஒரு பதில் என்ன?

**ஒரே இறைவனை வணங்குவோம். உங்கள் இறைவன் ஒருவன்தான். (அல்குர்ஆன் 2:133)**

**அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை!**

**(அல்குர்ஆன் 2:163)**

**அல்லாஹ்! அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை...!**

**(அல்குர்ஆன் 2:255)**

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவன்தான்! (அல்குர்ஆன் 4:171)

ஓர் இறைவனைத் தவிர வேறு இறைவன் இல்லை (அல்குர்ஆன் 5:73)

வணக்கத்திற்குரியவன் நிச்சயமாக அவன் ஒருவன்தான் (அல்குர்ஆன் 6:19)

நீங்கள் அல்லாஹ்வையே வணங்குங்கள் அவனையன்றி உங்களுக்கு வேறு இறைவன் இல்லை! (அல்குர்ஆன் 7:65)

"(நபியே!) வானங்களுக்கும் பூமிக்கும் இறைவன் யார்?" என்று நீர் கேளும். அவன், அல்லாஹ்தான் என்று நீரே கூறும். (அல்குர்ஆன் 13 : 16)

இன்னும் அல்லாஹ் கூறுகிறான்:

இரண்டு தெய்வங்களை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள். நிச்சயமாக அவன் ஒரே இறைவன்தான். (அல்குர்ஆன் 16:51)

(நபியே!) நீர் சொல்வீராக! நிச்சயமாக நான் உங்களைப் போன்ற மனிதனே நிச்சயமாக உங்களுடைய இறைவன் ஒரே இறைவன்தான் என்று எனக்கு வஹி மூலமாக அறிவிக்கப்பட்டிருக்கிறது! (அல்குர்ஆன் 18:110)

திருக்குர்ஆனில் உள்ள இத்தகைய ஏராளமான வசனங்கள் "இறைவன் ஒருவன்தான்" என்பதை வலியுறுத்துகின்றன. எனவே இறைக் கொள்கையில் தெளிவும், உண்மையும், கம்பீரமும் உடையதாக இஸ்லாம் இருக்கிறது.

ஒருத்தனை மட்டுமே கருத்தினில் இருத்தி; சிரத்தினைச் சாய்த்து; வணங்கி இரு கரத்தினை ஏந்தி; அந்த ஒருத்தனையே இறைஞ்சி வாழ்பவர்கள்தான் முஸ்லிம்கள்.

■ ■ ■

# இரு தெய்வம் இல்லையா?

**கேள்வி:**

மாற்று மதத்தைச் சார்ந்த என்னுடைய நண்பர் ஒருவர், "ஏன் ஒரே இறைவனை மட்டும் வைத்துக் கொள்ள வேண்டும்? இரண்டு அல்லது மூன்று தெய்வங்களை வைத்துக் கொண்டால் என்ன தப்பு? என்று கேட்கிறாரே!"

**பதில்:** "இறைவனை வைத்துக் கொள்வதா?" அவன் என்ன பூச்செடியா? பண்டமா? "ஒன்று வேண்டாம், இரண்டு அல்லது மூன்று வைத்துக் கொள்வோம்" என்று கூறுவது இறைவனை உங்களது விருப்பத்திற்கு ஏற்ற பண்டமாக மாற்றுவதாகும்.

"வைத்துக் கொள்வது" என்பதே இறை நம்பிக்கைக்கு விரோதம் ஆகும். "உயிர்கள் உட்பட அண்ட சராசரத்தையும் இறைவனே படைத்தான்" என்று நம்புவதுதான் இறை நம்பிக்கை.

கடவுளையே- மனிதன் தனது கற்பனைக்கு ஏற்பப் படைத்தான் என்பது நாத்திக வாதம் ஆகும். ஒன்று ஏன்? இரண்டு அல்லது மூன்று அல்லது பல பல தெய்வங்களை "வைத்துக் கொள்வது" என்று கூறுவதும் நாத்திக வாதம் என்கிற நாணயத்தின் மறு பக்கம்.

இறைவனை இரண்டு பேராய் -மூன்று பேராய்- அல்லது

பல தெய்வங்களாய் எண்ணுவோரைச் சிறிது கூர்ந்து கவனித்துப் பாருங்கள்.

அவர்கள் தங்களது ஒவ்வொரு தெய்வத்துக்கும் அதிகமான சக்தி உண்டு என்று நிலை நாட்ட கதைகளைப் புனைகிறார்கள். பிறகு அவர்களுக்குள் போட்டி வருகிறது. ஒரு தெய்வத்தைவிட இன்னொரு தெய்வம் உயர்ந்தது என்று நம்ப வைப்பதற்காக நம்ப முடியாத புராணங்களை உருவாக்குகிறார்கள்.

சில புராணங்களில் ஒரு தெய்வம், இன்னொரு தெய்வத்திடம் சண்டை இடுவதாக - போர்க்களத்தில் போர் புரிவதாக பொய்க் கதைகள் உள்ளன. ஒரு தெய்வம் தோற்பதாகவும், இன்னொரு தெய்வம் வெற்றி பெறுவதாகவும் கதையை முடிக்கிறார்கள். எதிர்த்தரப்புக்காரர்கள் இதை “பொய்” என்று கூறும் நிலை ஏற்படுகிறது. பிற தெய்வங்களை அவமதிக்கும் கதைகளும்-விவாதங்களும் தோன்றுகின்றன. விளைவு? பக்தர்களிடையே மோதலும் சண்டையும்- கொலைகளும் நடந்தன என்று வரலாறு கூறுகிறது.

இந்திய வரலாற்றில், குறிப்பாக தமிழக வரலாற்றில் “சிவ - விஷ்ணு” சண்டை பெரிதாக நடந்திருக்கிறது. விஷ்ணுவை நம்பிய வைணவரான நாமாநுஜரின் சீடர் கூரத்தாள்வான் என்பவரின் கண்கள் தோண்டி எடுக்கப்பட்டன.

சமண சைவப் போரில் அப்பர் என்ற திருநாவுக்கரசர் சமணராய் இருந்து சைவராய் மாறினார் என்பதற்காக அவர் கல்லால் பிணைக்கப்பட்டு கடலில் வீசப்பட்டார் என்று சைவ மத சரித்திரம் கூறுகிறது.

அதுபோன்றே, ஞானசம்பந்தர் காலத்தில் சமணர்கள் எண்ணாயிரம் பேர் கழுமரங்களில் ஏற்றப்பட்டு உயிர் துறக்கச் செய்யப்பட்டனர் என்ற வரலாற்றுச் செய்தியும் உண்டு.

இதை எல்லாம் படிக்கின்ற மக்களில் சாதாரண அறிவு படைத்தோர் வேறு ஒரு விபரீதமான முடிவுக்குச் செல்கிறார்கள். இறைவனும் வேண்டாம்; மதமும் வேண்டாம் என்று நாத்திக நிலையை அடைகிறார்கள்,

ஒரே மதத்தில் பல தெய்வங்களை ஏற்றுக் கொண்டோர் தங்களது தெய்வங்களுக்கு உயர்வு சேர்க்க வேண்டும் என்று கருதி அந்த தெய்வங்களுக்கு காதல், திருமணம், பிள்ளை பிறத்தல் ஆகிய கதைகளைக் கட்டுகிறார்கள்! விளைவு என்ன?

- இறைவனை -சாதாரண ஆசாபாசமுள்ள மனிதனின் நிலைக்கு அவர்கள் கொண்டு வருகிறார்கள்.

இன்னும் சில சொல் குறும்பர்கள் - விஷமக்கார சிலர் - இறைவனை காம ஆசை கொண்டவனாக வர்ணிக்கிறார்கள். காமலீலை நடத்துவதாகப் பொய்க் கதைகளைப் புனைந்து எழுதி வைத்தார்கள். இதனுடைய விளைவு என்ன?

- இறைவனை கண்ணியமான, மகத்தான அவனுடைய தன்மையிலிருந்து தரம்தாழ்த்தி மனித தன்மைக்கு அவர்கள் வர்ணிக்கின்றார்கள்.

இந்த காமக் கதைகளைப் படிப்போர் “இறைவன் இப்படியா?” என்று கருதி “இந்த மோசமான மனிதனை விட மிக கீழ்த்தரமாக இருக்கின்ற தெய்வங்களே வேண்டாம்” என்று கூறுகின்றவர்களாக மாறுகின்றனர்.

- ஓர் இறைவன்தான் - என்று நம்புவோரிடையே நாத்திகர்கள் “அதிகமாய்” தோன்றுவதில்லை.
- ஒன்றுக்கு மேற்பட்ட தெய்வங்களை நம்புவோரிடையே தான் நாத்திகர்கள் புற்றீசல் போல் தோன்றினார்கள். தோன்றிக் கொண்டிருக்கின்றனர்; இனிமேலும் தோன்றுவார்கள்.

எனவே, பல தெய்வக் கொள்கையே நாத்திகத்தின் ஊற்றுக் கண்; தோற்றுவாய்; பிறப்பிடம் என்பது உண்மையிலும் உயர்ந்த உண்மை!

ஒரே இறைவனை மட்டும் நம்புகிற இஸ்லாம் இறைவனைப் பற்றிக் கூறுகின்ற வர்ணனை தூய்மையாய் உயர்வாய் இருப்பதைக் காணலாம்.

இறைவனாகிய அல்லாஹ் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன். (அல்குர்ஆன் 1:2)

இணையற்றவன்! (அல்குர்ஆன் 6:163)

அவனுக்கு சந்ததி இல்லை. (அல்குர்ஆன் 2:116)

அனைத்தையும் ஆக்கியவன். (அல்குர்ஆன் 2:29)

புகழுக்குரியவன். (அல்குர்ஆன் 1:1)

படைப்புகளின் போஷகன். (அல்குர்ஆன் 1:1)

என்றும் உள்ளவன். (அல்குர்ஆன் 55:27)

தீர்ப்பு நாளின் அதிபதி. (அல்குர்ஆன் 1:3)

அனைத்தையும் நன்கு அறிந்தவன். (அல்குர்ஆன் 35:38)

ஆற்றல் மிக்கவன். (அல்குர்ஆன் 16:77)

அவன் அறிந்ததை எவரும் அறிய முடியாது.
(அல்குர்ஆன் 27:65)

நேர்வழியில் செல்வோருக்குத் துணை புரிபவன்.
(அல்குர்ஆன் 9:115)

மானக்கேடானதை ஏவவில்லை. (அல்குர்ஆன் 7:28)

எளிதான கட்டளைகளை ஏவுவான். (அல்குர்ஆன் 2:185)

அமைதியின் பக்கமே அழைப்பவன். (அல்குர்ஆன் 10:25)

இதுபோன்ற கண்ணியமான சொற்களை இஸ்லாம் இறைவனைக் குறித்து எடுத்துரைக்கின்றது. இவற்றைப் படிக்கும் போது நம்மையும் அறியாமல் உள்மனம் உவந்து ஏற்கிற பக்தி உண்டாகிறது. அச்சம் கலந்த அடக்கம் தோன்றுகிறது.

- கண்ணியமான இறைவன்!
- கண்ணியமான இறை பக்தியாளன்!

ஆகிய இரண்டு நிலைகளும் தோன்றுகின்றன, தொழுவோரும், தொழப்படுவோரும் தூய்மையான- கவுரவமான நிலை அடைவது ஓர் இறைவனைத் தொழுகிற போதுதான்!

- ஓர் இறைவன் என்பதுதான் மெய்! அதனால்தான் நாம் ஓர் இறைவன்தான் உண்டு எனக் கூறுகிறோம்.

■ ■ ■

# பல தெய்வ வேதம்!

**கேள்வி:**

“பல தெய்வம் உண்டு எனக் கூறி வழிபடுவோருக்கு வேதங்களின் சாட்சியம் இல்லை” என்று கூறினீர்கள். பல தெய்வ வணக்கக்காரர்கள் தங்களுடைய வேதம் என்று சிலவற்றைக் காட்டுகின்றனரே?

**பதில்:** அவர்கள் தங்களுடைய வேதம் என்று எடுத்துக் காட்டுகின்ற அனைத்துமே - வேதம் அல்லது திருமறை என்ற இஸ்லாமிய இலக்கணத்திற்கு மாறுபட்டவையாகும்.

- வேதம், திருமறை என்பது இறைவனே அருளச் செய்த இறைச் சொற்கள் அடங்கிய புத்தகம் என்பது இஸ்லாம் தருகின்ற இலக்கணம்.

ஆனால், பைபிள் என்ற புத்தகத்தின் முற்பகுதியில் நபிமார்களின் வரலாறும் இடையிடையே இறைவன் பேசிய வசனங்களும் வரும்.

பிற்பகுதியில், இயேசு என்ற ஈஸா நபியின் வரலாறும் அவர் கூறிய அறிவுரைகளும் எடுத்துரைக்கப்படும்.

இந்து மதத்தின் நான்கு வேதங்களும் இறைவனைப் பற்றிய ரிஷிகளின் துதிப்பாடல்கள் என்றே கூறுவர். பகவத் கீதை கூட மனிதனாகப் பிறந்த கிருஷ்ணனின் நல்லுரைகள் என்றே காணக்கிடக்கிறது.

- ஆகவே, மனிதப் பிறப்பு கொள்ளாத இறைவன் தனது சொற்களாகத் தந்த வேதமாகிய திருமறைதான் திருக்குர்ஆன் ஆகும்.
- அந்த இறைவனின் வேதத்தில், “ஓர் இறைவன்தான் உண்டு! பலதெய்வம் இல்லை” என்றே கூறப்பட்டிருக்கிறது.

ஒரு செய்தியை நாம் கூர்ந்து பார்க்க வேண்டும். பல தெய்வ வணக்கக்காரர்கள் காட்டும் வேதங்கள் கூட, “தெய்வம் ஒன்றுதான்” என்பதை மறுப்பதுமில்லை. அவ்வாறு மறுத்து வாதாட முன் வருவதுமில்லை.

இப்போது கூட பலதெய்வ வணக்கக்காரர்களை இது பற்றி வாதாட அழைத்துப் பாருங்கள். அவர்கள் இந்த விவாதத்திற்கே வரமாட்டார்கள். அப்படியே வந்தாலும் தோல்வி அடைவார்கள். ஏனெனில், அவர்கள் சார்ந்துள்ள கொள்கையே சத்தியம் என்ற பூரண நம்பிக்கை அவர்களிடம் இருக்காது. பூரண நம்பிக்கையின்றி வாதிடுவோர் வெற்றி பெற முடியாது.

- இஸ்லாமிய வரலாறு என்பதே ஓர் இறைக் கொள்கைக்கும், பலதெய்வ வணக்கத்திற்கும் இடையே நடைபெற்ற விவாதமும்; போரும் ஆகும்.

■ ■ ■

# இஸ்லாம் பழம்பெரும் மார்க்கம்

> **கேள்வி:**
> இது புதிய செய்தியாய் இருக்கிறதே! இதைப் பற்றி நீங்கள் விரிவான விளக்கம் ஒன்றைத் தர வேண்டும்!

**பதில்:** "அரபு நாட்டில் நபிகள் நாயகம் தோன்றி புதிய இறைவனையும் புதிய மதத்தையும் ஏற்படுத்தினார்" எனக் கருதுவது பிழையாகும்.

அல்லாஹ் என்ற ஓர் இறைவனின் ஆலயம் இருந்த இடம்தான் மக்கா. அந்த அரபு மக்கள் தங்களது பெயர்களில் "அப்துல்லாஹ்" (அல்லாஹுவின் அடிமை) என்ற பெயரையும் வைத்துக் கொண்டார்கள். நபிகள் நாயகத்தின் தந்தையின் பெயரே அப்துல்லாஹ்தான்.

ஆனால், அல்லாஹ் என்ற அந்த ஓர் இறைவனோடு பல தெய்வங்களை அரபு மக்கள் இணை வைத்துத் தொழத் தொடங்கினர். சிலைகளே இல்லாமல் இருந்த மக்கா ஆலயத்தில் துணைக்கடவுள், இணைக்கடவுள் என்று கூறி பல சிலைகளை உள்ளே நுழைத்தனர். அந்தப் பல தெய்வங்களை எதிர்த்துத் தான் நபிகள் நாயகம்- இறைவனின் அருளோடு விவாதம் நடத்தினார்கள். ஓர் இறைவனை மட்டுமே தொழுங்கள் என்று

எச்சரித்து, அச்சமூட்டி, இறை வழியில் அனைவரையும் கொண்டு வர முயன்றார்கள்.

இன்றைக்கு நமது நாட்டிலும் உலகிலும் (-வேறு பல நாடுகளிலும்) பல தெய்வ வணக்கம் இருக்கின்றது. இதை எதிர்த்து ஓர் இறைவனை வணங்குமாறு கூறுவதுதான் இன்றைய இஸ்லாமிய பணியாக இருக்க முடியும்.

இந்தப் பணியை நாம் செய்கிறபோது, பல தெய்வக்காரர்கள் வேறு ஒரு வழியில் வருவார்கள். எம்மதமும் சம்மதம் என்று கூறிக்கொண்டு, “உங்களது அல்லாஹ்வையும் எங்களது தெய்வங்களோடு ஒன்றாகச் சேர்த்துக் கொள்கிறோம்” என்று நயமாக உரைப்பர்.

ஆனால், ஓர் இறைக் கொள்கை உடையோர் இதை ஒப்புக் கொண்டது இல்லை; வருங்காலத்திலும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

நபிமார்களின் வரலாற்றையே கூர்ந்து படித்துப் பாருங்கள். மக்கள் ஓர் இறை வணக்கத்தைக் கைவிட்டு, பல தெய்வங்களை வணங்கியதை எதிர்த்துத்தான் அவர்கள் பணி புரிந்தனர்; அச்சமூட்டி எச்சரித்தனர். வாழையடி வாழையாக வந்த அந்த வரலாறு முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் காலத்தோடு முடிகிறது. அதற்குப் பிறகு பல தெய்வ வணக்கத்தை எதிர்த்து ஓர் இறைத் தத்துவத்தைப் பரப்ப வேண்டிய பொறுப்பு, நபிகள் நாயகத்தின் வழியை நம்புவோருக்கு (-நமக்கு)த்தான் இருக்கிறது.

■ ■ ■

# சிலைகளை, படங்களை தொழலாமா?

**கேள்வி:**

ஒரு விவாதத்திற்காக சிலர் கேட்கிறார்கள். ஓர் இறை வணக்கத்தை ஒருவர் ஒப்புக் கொள்கிறார். ஆனால் அந்த ஓர் இறைவனைப் படமாக -சிலையாக- அவர் வைத்துத் தொழலாமா?

**பதில்:** அப்படித் தொழுவதற்கு முன் அவர் நமது கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டும்.

1. சிலையாக, படமாக உருவாக்கப்பட்டுள்ள ஒன்றை வணங்குவோர் அதை என்றாவது உயிரோடு பார்த்திருக்கிறார்களா?

2. வணங்குவோர் இருக்கட்டும். அவற்றை படைத்தவர் களாவது (-உருவாக்கியவர்களாவது) நேரில் அந்தக் கடவுள்களைப் பார்த்தது உண்டா?

நேரில் பார்க்காத ஒன்றைப் படமாக வரைந்து, சிலையாக செதுக்கி வைத்தால் அதற்குப் பெயர்தான் கற்பனை!

- இறைவனை நேரில் பார்க்காதவர்கள், அவனைப் படமாக வரைந்தும், சிலையாக செதுக்கியும் வைப்பது பொய்!

- இஸ்லாமிய தத்துவப்படி இறைவனை நேரில் யாருமே காண முடியாது; காணவில்லை.
- நாம் காணாத - காணமுடியாத இறைவனை நமது விருப்பத்திற்கேற்ப சிலையாக. படமாக செய்வது பொய் மட்டுமல்ல! பாவம் என்றே இஸ்லாம் கருதுகிறது.
- இவ்வாறு செய்வது கொலை, களவு ஆகியவற்றைவிட மிகப் பெரிய பாவம் என்பது மட்டுமல்ல, இறைவனைப் பற்றியே பொய் உரைப்பதாக இருக்கின்ற காரணத்தால் அது "மன்னிக்க முடியாத பாவம்" என்றே இஸ்லாம் அதை வரையறையிட்டுக் காட்டுகிறது.

கடவுளை மனிதன் தனது கற்பனையால் படைத்தான் என்று நாத்திகவாதிகள் கூறுகிறார்களே, அதற்கு "ஆமாம்" போடுவதுதான் இந்தச் சிலைகளும் படங்களும் எனவே நாத்திகம் எப்படி மன்னிக்க முடியாத பாவமோ அவ்விதமே இறைவனை சிலையாக, படமாக ஆக்கிக் காட்டுவதும் மன்னிக்க முடியாத பாவம்!

அந்தக் கல்லையும், அது எடுக்கப்பட்ட பாறைகளையும். மலையையும், மலைகள் அடர்ந்த பூமியையும், பூமியை உள்ளடக்கிய சூரிய மண்டலத்தையும், சூரிய மண்டலம் போன்ற பல கோடி மண்டலங்களையும் உள்ளடக்கிய விண்வெளியையும் ஓர் இலக்கண வேலிக்குள் சுழல வைக்கும் பிரம்மாண்டமான சக்திபெற்ற இறைவனுக்கு கேவலம் ஒரு சிறு கல்லை, படத்தை இணையாக்குவது சரியா?

ஆகவே. இணை வைத்தல் என்ற இந்தக் கற்பனை "பொய்" என்றும், "இறைவனால் மன்னிக்க முடியாத பாவம்" என்றும் கருதப்படுவது சரியே!

திருக்குர்ஆன் கூறுகிறது.

**நிச்சயமாக இறைவன் தனக்கு இணைவைப்பதை மன்னிக்கவே மாட்டான். இதனைத் தவிர (மற்ற) எதனையும் தான் நாடியோருக்கு மன்னிப்பான். எவர்கள் இறைவனுக்கு இணைவைக்கிறார்களோ அவர்கள் நிச்சயமாக மிகப்பெரும் பாவத்தையே கற்பனை செய்கிறார்கள்.**

**(அல்குர்ஆன் 4:48, 116)**

இன்னும் இதுபோன்ற ஏராளமான அல்குர்ஆன் வசனங்களிலும் “இணை வைப்பது பாவம்” என்று கூறப்படுகிறது.

ஏன் இது மன்னிக்க முடியாத பாவம் எனக் கருதப்படுகிறது? கடவுள் சிலைகளையும், படங்களையும் எப்படி அவர்கள் அமைக்கிறார்கள்? சிலர் மனித உருவில் கை, கால், முகம் என்று அமைத்து நான்கு கை, எட்டுக் கை, பதினாறு கை என்று கற்பனையை - பொய்யை மிகுதப்படுத்திக் காட்டுகிறார்கள்.

அதுபோல் இந்தியாவில் சில கடவுள்களுக்கு அவற்றின் கைகளில் ஆயுதங்களையும் கொடுக்கிறார்கள். எல்லாம் வல்ல இறைவனுக்கு எதற்கு ஆயுதங்கள்? பாதுகாப்பிற்காகவா? பிறரை அழிப்பதற்காகவா?

- நினைத்தாலே நினைப்பது நடக்கும் சக்தி படைத்த இறைவனுக்கு ஆயுதங்கள் என்பவை அவனை பலவீனன் - சக்தியற்றவன் என்று காட்டுகிறதல்லவா?

- சிலர் பெண் கடவுள்களை சிலையாக - படமாக படைக்கிற போது பெண் உறுப்புகளையும் உருவாக்குவது எத்தனை பெரிய பாவம்?

இந்தியாவைச் சார்ந்த ஓர் ஓவியன் தனது அரச குலத்துக் காதலியை பெண் கடவுளாக எழுதினான் என்பது வரலாறு.

ஒரு மனிதனின் காதலியை தெய்வம் என்று நம்புவதும். வணங்குவதும் எவ்வளவு பெரிய பாவம்?

இறைவனை இவ்விதமாய் சின்னாபின்னமாக்கி, சிலை வடித்து, படம் வரைந்து, "இதுதான் இறைவன்!" என்று கூறினால் - இறைவனுக்குக் கோபம் வருமா? வராதா?

எடுத்துக்காட்டாக, உங்களது படத்தை வரைபவன் உங்கள் சிலையை வடிப்பவன் - உங்களைப் பார்க்காமல் உங்களது படத்தை - சிலையை உருவாக்கி விட்டு இதுதான் நீங்கள் என்று யாரிடமாவது கூறினால் உங்களுக்குக் கோபம் வருமா? வராதா?

அந்தச் சிலையிலும் - படத்திலும் உங்களுக்கு மூன்று தலை, நான்கு கை, எட்டுக்கால் என அமைத்து இதுதான் நீங்கள் என்று யாரிடமாவது காட்டினால் உங்களுக்கு எத்துனைக் கோபம் வரும்?

கேவலம்! தோன்றி அழியும் மனிதனான உங்களுக்கே உங்களைப் பற்றி தவறான படத்தையும். சிலையையும் அமைத்திடும்போது சினம் வருகிறது என்றால்-

- தோற்றமும் மறைவும் அற்ற...
- பிறப்பும் இறப்பும் அற்ற...
- இதுவரை யாரும் கண்டிராத - காண முடியாத பெரும் ஆற்றலை - சக்தியை - அகிலாண்ட கோடி பிரம்மாண்டங்களை ஆட்டிப் படைப்போனை...

கற்பனையாய் பொய்யாய் சிலை அல்லது படம் அமைத்து இதுதான் இறைவன் என்றால் அது "மன்னிக்க முடியாத பாவம்" தானே?

■ ■ ■

# ஒருமுகப்படுத்துவது சிலையா?

> **கேள்வி:**
> சிலையாய் படமாய் இறைவனைப் படைத்தது, “சிந்தனைகளை ஒருமுகப்படுத்தி - இறைத்தொழுகையில் தியானத்தில் இருப்பதற்காகத்தான்” என்று அவர்கள் கூறுகிறார்களே!

**பதில்:** அது பொய் என்பது முஸ்லிம்கள் ஆயிரக்கணக்கான வருடங்களாய் நிரூபித்துக் காட்டினார்கள்; காட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

எந்தச் சிலையும் படமும் இல்லாமல் துருவத்திலிருந்து துருவம் வரை நூறு கோடி முஸ்லிம்கள் இறைத்தொழுகை நடத்து கிறார்களே! இறைத் தியானத்திலும் இருக்கிறார்களே! ஆகவே படம் அல்லது சிலை இருந்தால்தான் மனம் ஒருமைப்படும் என்பது பொய்!

கப்பல் நடுக்கடலில் செல்கிறது; புயல் சூழ்ந்து கொள்கிறது; அனைவரும் மூழ்கி இறந்து விட நேரும் என்ற பயங்கர நிலை தோன்றுகிறது. அங்கே படம் இல்லை; சிலை இல்லை; என்ன செய்வார்கள், சிலையையும் - படத்தையும் தொழுபவர்கள் படம்,

இல்லாமலேயே மன ஓர்மையோடு தொழமாட்டார்களா? அபயம் கேட்க மாட்டார்களா?

பல நாட்டு வரலாறுகளை - புராணங்களைப் பார்த்தாலும் மிகப் பெரிய ஞானிகள் படம், சிலை இல்லாமல் ஏகாந்தமாய் தனிமையாய் அமர்ந்து தொழுகை - தியானம் செய்ததாகத் தானே கூறப்படுகிறது?

- ஆகவே, சிலை, படம் இருந்தால்தான் மனம் ஓர்மைப்பட்டு இறை வழிபாட்டில் அது ஈடுபடும் என்பது பொய்!

■ ■ ■

# சிலைகள் சக்தி உள்ளவையா?

**கேள்வி:**

சிலர் சிலைகளை சக்தியுள்ளவை என்று நம்புகிறார்களே!?

**பதில்:** ஆனால் உண்மையில் அப்படி இல்லை! அவர்களே கூறுகின்ற அந்தச் சிலைகளை திருடர்கள் புகுந்து திருடிச் சென்று வெளி நாட்டில் விற்பதாக அவர்களின் பத்திரிக்கைகளே செய்தியாய்ப் போடுகின்றனர்.

சிலைகளுடைய சக்தியின்மை பற்றி இந்தியாவிலுள்ள இந்து மதத்தை சேர்ந்த தவத்திரு பிரம்மானந்த சுவாமி சிலையோக சித்தர் (1852 - 1929) 'விக்ரக ஆராதனைக் கண்டனம்' என்ற நூலில் கூறுகிறார்: "சிலைகளுக்கு - விக்ரகங்களுக்கு யாதொரு சக்தியும் இல்லை."

புகழ் பெற்ற சில கோயில்களில் திருடர்கள் புகுந்து அளவற்ற பொருளைத் திருடிச் செல்வதைக் காண்கிறோம். சில கோயில்களில் அமைக்கப்பட்ட பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள சிலைகளையும் பிம்பங்களையும் தோண்டி எடுத்து தலை கீழாக (பிற மதத்தார்) நட்ட கதைகளையும் நாம் அறிந்து இருக்கிறோம்.

- ஓர் எறும்பினாலும் ஒரு கொசுவினாலும் செய்யக்கூடிய பதில் நடவடிக்கையைக் கூட அந்தச் சிலைகளால் செய்ய இயலவில்லை.

- சிலைகளை அமைத்த ஆச்சாரியர்கள் அந்தச் சிலைகளுக்கு உயிர் சக்தி (ஜீவப் பிரதிஷ்டை) கொடுத்தது எங்கே போயிற்று?

அந்தச் சிலைகள் சக்தி உள்ளவையாய் இருந்தால் சிலைத் திருடர்கள் புகுவதற்கு முன் காவலாளிகளுக்கோ, பூசாரிகளுக்கோ, தர்மகர்த்தாக்களுக்கோ, பக்தர்களுக்கோ, போலீஸ்காரர்களுக்கோ "திருடர்கள் வருகின்றார்கள்" என்பதாக முன்னரே ஓர் எச்சரிக்கை செய்திருக்கலாமே?

அவ்விதம் எச்சரிக்கை செய்யாவிடினும், திருடர்கள் அந்தச் சிலையைத் திருடிக்கொண்டு ஓடுகிறபோது ஓட முடியாமல் அவ்விடத்திலேயே (கை, கால் விளங்காமல்) ஸ்தம்பித்து நிற்கச் செய்திருக்கலாமே?

திருடர்கள் அப்படி நிற்பதை (அடுத்த நாள் காலையில்) பார்க்கிற போது பக்தி இல்லாத மகா பாவிகளுக்கும் பக்தி உண்டாகி இருக்குமே! அந்தத் திருடர்களுக்கும் உயர்ந்த பக்தி உண்டாகி அவர்களும் நல்வழி வந்திருப்பார்களே!

அதைவிட, சக்தியுள்ள சிலைகள் திருடர்கள் மனதிலேயே திருடக் கூடாது என்ற எண்ணத்தை உண்டாக்கி இருக்கலாமே!

படை எடுத்து வந்தவர்கள் பலர் சிலைகளை உடைத்தார்கள்; திரவியங்களை வாரிக் கொண்டு சென்றார்கள், அப்போது இந்தச் சிலைகள் வாய் மூடி இருந்தது ஏன்?

அந்தச் சிலைகளுக்கு சிறிதளவாவது சக்தி இருந்தால், அந்தந்த சந்தர்ப்பங்களில் கொஞ்சமாவது தங்களது சக்தியை காட்டியிருக்கலாமே!

இந்த சக்தியற்ற சிலைகளா நமக்குப் பாதுகாப்புத் தரும்? நோய் நீக்கும்? சந்தான விருத்தி (பிள்ளைவரம்) கொடுக்கும்? சம்பத்து (செல்வம்) கொடுக்கும்?

சிலை வணக்கம் செய்து யாகம், விரதம், தானம், தீர்த்தம் ஆடுதல் ஆகிய காரியங்களைச் செய்வோர் மிருகங்களே! என்று வசிஷ்டமாமுனி கூறுவார்.

காலம் யஜ்ஞ-தபோ-தான

தீர்த்த தேவார்ச்சன பிரமை

சிரமாதி சகோபேதா

க்ஷபயந்தி ம்ருகா இவ.

சித்தர்களின் மூடமதித் திறவு கோல் என்ற பகுதியிலும் சிலையை வணங்குவது பற்றிக் கண்டனம் செய்யப்பட்டுள்ளது.

கீழ்க்கண்டவாறு பல மகான்கள் (சித்தர்கள்) கருத்து தெரிவித்திருக்கிறார்கள்.

- எத்தனைதான் கல்லுகளைப் பூஜித்தாலும்
  ஈனர்களே உங்களுக்கு மோட்சம் உண்டா?
- ஓசைபெற்ற கல்லை நீருடைத் துருக்கள் செய்கிறீர்!
  வாசலில் பதித்த கல்லை மழுங்கவும் மிதிக்கிறீர்!
  பூஜை பெற்ற கல்லிலே பூவும் நீரும் சாற்றுறீர்!
  ஈசனுக்கு உகந்தகல் இரண்டு கல்லும் அல்லவே!
- சண்டாளர் கல்லுகளைத் தெய்வம் என்று
  பொய்க் குருக்கள் சொன்ன புத்திதனைக் கேட்டு
  பூசை செய்து கல்லுகளைப் போற்றி செய்வார்
- நட்ட கல்லை தெய்வம் என்று
  நாலு புட்பம் சாற்றுறீர்!
  சுற்றி வந்து மொண மொணன்று
  சொல்லும் மந்திரம் ஏதடா?
  நட்ட கல்லும், பேசுமோ!

நாதன் உள் இருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம்
கறிச் சுவை அறியுமோ?

ஆகவே, இந்து மதத்தில் இருந்த ஞானிகளும் சிலை வணக்கத்தை எதிர்த்துள்ளனர் என்பது தெளிவாக நமக்குத் தெரிகிறது. கிறிஸ்துவர்கள் படிக்கின்ற பைபிளில் முதல் பாகமான பழைய ஏற்பாடு என்பதே சிலை வணக்கத்தை எதிர்த்த வரலாறுதான். அதில் சிலர் சிலைகளை - விக்ரகங்களை உடைத்த வரலாறு கூட வரும். சிலைகளுக்கு சக்தி ஏதும் இருக்கவில்லை என்று அந்தப் புத்தகமும் சான்று கூறுகிறது.

■ ■ ■

# இயற்கை சக்திகள் தெய்வமா?

> **கேள்வி:**
> சூரியன், காற்று, நெருப்பு, சந்திரன், நட்சத்திரம் போன்றவை எல்லாம் நமக்கு வியப்பூட்டும் சக்திகள் எனக் கூறி அவற்றை வழிபடுகிறார்களே, அதுசரியா?

**பதில்:** இவை எல்லாம் சக்திகள் அல்லது வியப்பூட்டுபவை என்றாலும் இவற்றுக்கும் அழிவு உண்டு. அல்லது கட்டுப்பாட்டில் அடங்கிப் போகிற தன்மை உண்டு.

இரவில் சூரியனுக்கு முழு ஆதிக்கம் இல்லை. சூரியனே பின் ஒரு காலத்தில் உடைந்து தூள் தூளாகும் என்று வானியல் ஆராய்ச்சி நிபுணர்கள் கூறுகிறார்கள்.

சந்திரன், நட்சத்திரம் போன்றவையும் அழிவதற்குரியவை என்றே விஞ்ஞானம் கூறுகிறது.

காற்று, நெருப்பு போன்றவற்றைக் கட்டுப்பாட்டுச் சிறைக்குள் அடக்கி வைக்க முடியும், ஓரளவு! காற்றும் நெருப்பும் இல்லாத நேரங்களும், இடங்களும் உண்டு! (வான மண்டலத்தின் வெற்று - சூன்ய இடங்கள்!)

ஆகவே இவை சக்தியும் வலிமையும் படைத்தவையாக இருந்தாலும் இவை மரணம் உள்ளவை; கட்டுப்படக்கூடியவை

என்பதால் இவற்றை நாம் தொழுவதற்கு உரிய வல்ல இறைவனாக ஆகிவிட முடியாது.

மனிதனை வியப்படையச் செய்கின்ற எல்லாவற்றையும் தெய்வமாகக் கருதித் தொழத் தொடங்கினால் லட்சக்கணக்கான, கோடிக்கணக்கான தெய்வங்கள் தோன்றிவிடும். இந்து மதத்தில் முப்பத்து முக்கோடி தெய்வங்கள் - தேவர்கள் உண்டு என்று கூறப்படுவது உண்டு. அதை எண்ணால் எழுதிப் பார்த்தால் அதில் உள்ள வியப்பு தெரியும். 33,00,00,000 என்பதுதான் எண்ணால் எழுதிப் பார்த்து வியப்படையக் கூடியது.

சக்திகளை - அதிலும் உருவமற்ற சக்திகளை - உருவமற்றதாகவே நினைத்துத் தொழுகிறார்களா? என்றால் இல்லை. அதற்கும் உருவம் அமைத்துக் கொண்டாடுகிறார்கள், தொழுகிறார்கள், இதனால் சிலைகளின் எண்ணிக்கையும் கோடிக்கணக்கில் பெருகுகின்றன. ஒவ்வொரு சிலையைப் பற்றியும் ஒவ்வொரு கதை பின்னப்பட்டு - மனித மூளையே தாங்க முடியாத அளவுக்கு கோடிக்கணக்கான கதைகள் உருவாக்கப்படுகின்றன.

உதாரணமாக இந்து வேதத்தில் பெரிய கடவுள்களாகக் குறிப்பாகச் சொல்லப்படுபவை மூன்றுதான். ஆனால், அதன் பின்னர் சக்திகள் கடவுள்களாக ஆக்கப்பட்டன. அதைத் தொடர்ந்து மிருகங்கள், மரங்கள், பறவைகள், ஆறுகள் என்று காண்பன எல்லாமே கடவுள்களாக ஆக்கப்பட்டன. சிலைகளாக ஆக்கப்பட்டன.

இப்படி உருவான பல கடவுள் கொள்கை, சிலை வணக்கம் ஆகிய அஞ்ஞானக் கருத்துகளை நீக்கும் ஞானம் திருக்குர்ஆன் முழுவதும் கூறப்படுகிறது. இப்ராஹீம் (ஆப்ரகாம்) வரலாறு பற்றிய திருக்குர்ஆன் வசனம் இவ்வாறு கூறுகிறது:

**இப்ராஹீம் தன்னுடைய தந்தையான ஆஸரை நோக்கி "விக்ரகங்களை தெய்வங்களாக எடுத்துக் கொண்டீரா?**

நிச்சயமாக நீரும் உம்முடைய மக்களும் பகிரங்கமான வழிகேட்டில் இருப்பதை நான் காண்கிறேன்'' என்று கூறினார்.

இப்ராஹீம் உறுதி கொள்ளும் பொருட்டு வானங்களிலும் பூமியிலுள்ள (நம்முடைய) படைப்புகளை நாம் அவருக்கு இவ்வாறு காட்டி வந்தோம்.

(ஒரு நாள்) இருள் சூழ்ந்த இரவில் (ஒளிவிட்டுக் கொண்டிருந்த) ஒரு நட்சத்திரத்தைக் கண்டு...

இது என்னுடைய இறைவன் (ஆகுமா?) எனத் தம் மக்களை கேட்டு, மறையக் கூடியவற்றை (எனது இறைவனாக ஆக்கிக் கொள்ள) நான் விரும்பமாட்டேன் என்று கூறி விட்டார்.

பின்னர் உதயமான சந்திரனைக் காணவே இது என்னுடைய இறைவன் (ஆகுமா?) எனக் கேட்டு அதுவும் மறையவே (அதனையும் நிராகரித்து விட்டு) என் இறைவன் என்னை நேரான வழியில் செலுத்தாவிடில், வழி தவறிய மக்களில் நானும் ஒருவனாகி விடுவேன் என்று கூறினார்.

பின்னர் உதயமான சூரியனைக் கண்டபோது இது மிகப் பெரியதாயிருக்கிறது, இது என்னுடைய இறைவன் (ஆகுமா?) எனக் கேட்டு, அதுவும் மறையவே அவர் (தமது மக்களை நோக்கி) என் மக்களே! நீங்கள் இணையாக்கும் ஒவ்வொன்றிலிருந்தும் நிச்சயமாக நான் விலகிக் கொண்டேன் என்று கூறிவிட்டு வானங்களையும் பூமியையும் எவன் படைத்தானோ அவன் பக்கமே நிச்சயமாக நான் முற்றிலும் நோக்குகிறேன். நான் இணை வைப்பவன் அல்ல என்று கூறினார். (அல்குர்ஆன் 6:74-79)

ஏராளமான தெய்வங்களை தாராளமாக எடுத்துக் கொண்டவர்கள், (இயற்கை) சக்திகளை எல்லாம் தொழுகிறவர்கள் ஒரே இறைவனைத் தொழுகிறவர்களை விட எந்த வகையில் உயர்ந்தவர்களாக இருக்கிறார்கள்?

“இறைவன் என்பவன் ஒருவன் இல்லை; பல தெய்வம்தான் உண்டு” என்று தத்துவ வாதத்தால் நிரூபிக்க முடிகிறதா?

- வாழ்வில் ஓர் இறைவனைத் தொழுபவர்களை விட அனைத்திலும் வெற்றி பெற்றவர்கள் - அடிமைகளாக வாழாதவர்களாக இருக்கிறார்களா? அவர்களுடைய நாடுகள் இன்னொரு நாட்டுக்கு அடிமையான வரலாறு தானே இருக்கிறது? இந்த சக்தியுள்ள பல தெய்வங்கள் அவர்களை அடிமை வாழ்விலிருந்து காப்பாற்றினவா?
- சூரியன், நெருப்பு, காற்று போன்றவை தம்மை தொழுபவருக்கு தனியாக சிறப்பாக ஏதாவது வெளிச்சம், சூடு, மென்மை தந்திருக்கிறதா? பல தெய்வக்காரர்கள் தொழுகின்ற பசு போன்ற மிருகங்கள் இவர்களுக்குத் தனியாக - சிறப்பாக சலுகை அளித்திருக்கின்றனவா? இல்லை.

எனவே ஓர் இறைவனுக்கு இணையாகப் பல தெய்வங்களை வைத்து வழிபடுபவர்கள் பலவீனமான ஒன்றையே பாதுகாப்பு என்று தேடி ஓடுகிறார்கள். திருக்குர்ஆன் இதை ஓர் உதாரணம் (- எடுத்துக்காட்டு) மூலம் அழகாகக் கூறுகிறது.

**அல்லாஹ்வை அன்றி (பல தெய்வங்களை) தங்களுக்கு இரட்சகனாக எடுத்துக் கொண்டவர்களின் உதாரணம் சிலந்தி வலையை வீடாக எடுத்துக் கொள்ளும் பூச்சியை ஒத்திருக்கிறது. வீடுகளில் எல்லாம் பலவீனமான வீடு சிலந்திப் பூச்சியின் வீடுதான் (இதை) அவர்கள் அறிந்து கொள்ள வேண்டாமா? (அல்குர்ஆன் 29:41)**

ஆகவே உலகின் சக்திகளைப் பல தெய்வங்களாகக் கற்பித்துத் தொழுவது இறுதியில் வீணாக அழிந்து போகக்கூடிய ஒன்றே!

■ ■ ■

# நமக்குள் இறைவனா?
# நாம் இறைவனா?

**கேள்வி:**
“நமக்குள் இறைவன் இருக்கிறான்” என்று தொடங்கி “நானே இறைவன் - அஹம்பிரமம்” என்று கூறுகிறார்கள். ஒவ்வொருவரும் இறைவனின் அம்சம், கூறு(-பாகம்)தான் என்றும் கூறுகிறார்கள். இது சரியா?

**பதில்** : இல்லை. நமக்குள் இறைவன் என்பதும் வேறு. நாமே இறைவன் என்பதும் வேறு. இதைவிட “நாம் இறைவனுக்கு உரியவர்கள், இறைவனின் ஆற்றலுக்குக் கட்டுப்பட்டவர்கள்” என்ற கருத்தே நல்லது.

‘நமக்குள் இறைவன்’ என்ற கருத்து - இறைவன் முதன் முதலாக ஆதம் நபிக்கு ஊதிய உயிர்க்காற்று தொடர்ந்து பரம்பரை பரம்பரையாக - வழி வழியாக மனிதருக்குள் வருவது என்ற கருத்தை வைத்துப் புனையப்பட்டதாகச் சிலர் கூறுவர்.

ஆனால், இதில் ஒரு விபத்து உண்டு நமக்குள் இறைவன் என்பது “நாமே இறைவன்” என்ற ஆணவத்திற்கு - கர்வத்திற்குக் கொண்டு போய்ச் சேர்த்து விடும்.

முற்காலத்தில் இருந்த மன்னர்கள் தங்களை இப்படி அறிவித்துக் கொண்டார்கள்.

எகிப்து நாட்டின் பிர்அவ்ன் மன்னன்,

மத்திய ஆசியாவின் நம்ரூது மன்னன்,

இந்தியாவின் இரண்யன்...

என்று அந்தப் பட்டியல் நீளும். ஆனால், இவர்கள் எல்லோரும் மரணம் அடையும் போது "இறைவன் இறந்தான் அல்லது கொல்லப்பட்டான்" என்று கூறும் நிலை வருகிறது. இறப்பவன் அல்லது கொல்லப்படுபவன் இறைவனா? என்ற வினா எழுகிறது.

அப்படி எழுகிறபோது இவர்களது "இறைத்தன்மை இறப்பு வழி (சாவுப் பார்வை) விழித்த கதை" தெரிகிறது. அடுத்து நமக்குள் இறைவன் என்பதும் பொருந்தாத ஒன்று. அளப்பரிய சக்தி படைத்தவன் அளவுள்ள சக்தி பெற்றவருக்குள்ளா? பிணி, மூப்பு இல்லாதவன் நோய் படுக்கையில் நொந்து - மூப்பில் வெந்து விழுவோனுக்குள்ளா! இறப்பே இல்லாதவன் இறப்பு உடையவனுக்குள்ளா?

நாம் இறைவனுக்கு உரியவர்கள்; இறைவனின் ஆற்றலுக்குக் கட்டுப்பட்டவர்கள் - எனும் கருத்தே உகந்தது.

அவனே படைத்தான்; அவனே காத்தான்; அவனே அழிப்பான்; அவனே நீதித் தீர்ப்பு நாளில் தண்டனையும் பரிசும் அளிப்பான் என்று ஒப்புக் கொள்கின்ற நம்பிக்கையாளர்கள் "இறைவன் வேறு, நாம் வேறு" என்பதை ஒப்புக் கொண்டாக வேண்டும்;

அவன் அல்ல நாம்
(We are not He)

அவனுக்கு உரியவர்கள் நாம்
(We are 'His')

இறைவனின் இலக்கணத்திற்கு மீறி நமக்குள் இறைவன் இருக்கிறான் எனக் கூறுவதும் - நாமே இறைவன் என்று கூறுவதும் நடைமுறைக்கு சாத்தியமற்ற வாதமாகும்.

பிறப்பு- அறிவறியாச் சிறு பருவம் - உறுப்புகளின் வளர்ச்சி, தளர்ச்சி; அங்கங்களின் அளவு; வைப்பு முறை; காமம் இணைந்த சந்ததிப் பெருக்கு, பிணி, மூப்பு, சாவு என்ற இந்த இலக்கணத்தை மீறி யாரும் செயல்பட இயலாது.

எனவே, இலக்கணத்திற்கு உட்பட்ட மனிதர் இறைவனைத் தன்னுள் அடக்கி இருப்பதாகவும் கருத இயலாது; தானே இறைவன் என்று செருக்கித் தருக்கிக் கொள்ளவும் இயலாது.

அவ்வாறாயின் இறைவன் மனிதரை விட்டு எங்கோ வெகு தொலைவில் இருக்கிறான் என்று எடுத்துக் கொள்ள முடியுமா? இஸ்லாம் அழகிய முறையில் பதில் அளிக்கிறது.

**“நான் நிச்சயமாக அருகிலேயே இருக்கிறேன், என்னை அழைத்தால் அழைப்போனின் அழைப்புக்கு நான் விடை அளிப்பேன்!”** **(அல்குர்ஆன் 2:186)**

**“பிடரியிலுள்ள உயிர் நரம்பை விட நாம் அவனுக்கு (-மனிதனுக்கு) மிக்க அருகில் இருக்கிறோம்.”**

**(அல்குர்ஆன் 50:16)**

**நாம் அவனுக்கு (-மனிதனுக்கு) உங்களை விட மிக்க அருகில் இருக்கின்றோம். எனினும் நீங்கள் (நம்மை) பார்ப்பதில்லை.** **(அல்குர்ஆன் 56:85)**

இறைவனே நான்! அல்லது நமக்குள் இறைவன் என்பதை விட இறைவன் நம் அருகில் இருக்கிறான் என்பது எத்துனை அழகிய உண்மை?

■ ■ ■

# அவதாரங்கள் இறைவனா?

**கேள்வி:**
“இறைவனே மனித உரு எடுத்து வந்தார்” என்று கூறப்படுகிறது. இந்த அவதாரக் (Incarnation) கருத்துக்குப் பதில் என்ன?

**பதில்:** இறைவன் பூமியில் தோன்றி நல்லவர்களைக் காத்தார். வல்லவர்களை அழித்தார் எனும் கருத்து இறைவனின் ஆற்றலைக் குறைத்து மதிப்பிடுவதாகும்.

மனித அவதாரம் எடுக்காமலேயே அவற்றை செய்ய அவனால் முடியும். அல்லது பூமியிலுள்ள சிலருக்கு கெட்டவர்களை விட அதிகமான ஆற்றலைக் கொடுத்து அவர்களை அழிக்க முடியும். இதை விடுத்து அவன் ஏன் பூமியில் இறங்க வேண்டும்?

பூமிக்கு வருகிறபோது பெண்வயிற்றில் இறைவன் பிறந்தான் என்பது இறைவன் பிறப்பும் இறப்பும் அற்றவன் எனும் கொள்கைக்கு விரோதமாகி விடுகிறது.

மனிதனாய் வருகிறபோது சிறுவயதுப் பருவங்கள், வாலிபம், காமம், பிள்ளைப் பேறுகள் என்று இறைத் தன்மைக்கு இழிவு சேர்க்கும் கதையைப் புனைய வேண்டியதாயிற்று. இறைவன் இப்படிச் செய்யலாமா? என்ற கேள்விகளை நாத்திகர்கள் மட்டுமல்ல ஆத்திகர்களும் கேட்கத் தொடங்கி விடுகிறார்கள்.

இந்துப் புராணத்தில் இறைவனின் அவதாரமான இராமன் - மறைந்திருந்து வாலி என்பவனைக் கொல்கிறான்.

- கிருஷ்ணன் தர்மத்தைக் காக்க அதர்மங்கள் புரிகிறான்.
- அன்பையே போதிக்க வந்த இயேசு தேவாலயத்தில் சாட்டை எடுத்து அடிக்கிறார்.

இந்த செயல்களுக்கு ஆயிரமாயிரம் காரணங்கள், விளக்கங்கள் கூறப்பட்டாலும், “இறைவன் இப்படிச் செய்யலாமா?” என்ற கேள்வி இருந்து கொண்டே இருக்கும்.

இறைவனுக்குப் பிறப்பு இல்லை; இறப்பு இல்லை; மனிதனாக அவதாரமும் எடுப்பதில்லை என்ற உண்மையை ஒப்புக் கொண்டால் - இந்த விமர்சனங்களிலிருந்து இறைவன் விலகி மேம்படுவதைக் காணலாம். இஸ்லாம் மார்க்கம் இதனையே வலியுறுத்துகிறது.

இறைவன் அவதாரம் எடுப்பதில்லை. அதற்குப் பதிலாக தனது இறைத் தூதுவர்களை மனிதர்களிடமிருந்து தேர்ந்தெடுக்கிறான்; நல்லதைக் காக்கவும் - கெட்டதை எதிர்க்கவும் ஏவுகிறான். இறைத் தூதர்களின் வாழ்வில் விமர்சனத்துக்குரியது இருந்தால் அது இறைத் தூதர்களையே சேரும். இறைவனைச் சேர்வதில்லை! இது எத்தகைய அழகிய உண்மை.

எனவே, இறைவன் மனித அவதாரம் எடுத்தான் பூமிக்கு இறங்கி வந்தான் என்பது உண்மையும் இல்லை; தூய்மையான இறைத் தன்மைக்கு ஏற்றதாகவும் இல்லை.

■ ■ ■

# பெண் தெய்வங்களை ஏற்கலாமா?

**கேள்வி:**
ஆண் தெய்வங்களைத் தொழுபவர்கள் பெண் தெய்வங்களையும் தொழுகிறார்களே, இது சரியா?

**பதில்:** சிலர் ஆண் தெய்வத்தைவிட வல்லமை வாய்ந்ததாகப் பெண் தெய்வத்தை உருவாக்குகிறார்கள். இன்னும் சிலர் ஆண் தெய்வத்துக்கு மனைவியாக, சமமான ஆற்றல் படைத்தவராகப் பெண் தெய்வத்தைப் படைக்கிறார்கள். மற்றும் சிலர், ஆண் தெய்வத்திற்குப் புதல்விகளாகப் பெண்களை உருவாக்குகிறார்கள். இதன் விளைவு என்ன என்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

- ஏராளமான கதைகள், கற்பனைகள் சேர்க்கப்பட்டு தெய்வத் தன்மையே அழிகின்ற நிலை ஏற்படுவதைக் காணலாம்.
- இந்து மதத்தில் சிலர் அண்ட சராசரங்களைப் படைத்தவர் ஆதிபராசக்தி என்று கதை புனைகிறார்கள்.
- பெண் என்ற சக்தி இல்லையானால் சிவன் என்பவரே இயங்க முடியாது என்று நிலை நாட்டப் பார்க்கிறார்கள்.
- பைபிளில் இயேசு நாதரைப் பெற்றதைத் தவிர எந்த விதமான அற்புதமும் செய்யாத - போதனை செய்யாத

-மேரி என்பவர் தேவமாதா என்ற நிலைக்கு உயர்த்திக் கதைகள் புனையப்படுகின்றன.

- அரேபிய நாட்டில்கூட நபிகள் நாயகத்தின் காலத்திலேயே வல்லமை மிக்கப் பெண் தெய்வங்கள் அல்லாஹ்வின் பெண் மக்களாய் இருந்தார்கள் என்ற கதை புனையப் பட்டது. அவர்களின் சிலைகளும் மக்காவின் ஆலயத்தில் வைக்கப்பட்டு இருந்தன.

இந்தப் பெண் தெய்வங்களை உருவாக்கியுள்ளவர்களையும் கேட்டுப் பார்க்கலாம். பெண்களையும் வினவிப் பார்க்கலாம்.

முழு முதல் சக்தியாகப் பெண்ணால் இயங்க முடியுமா? நடைமுறை வாழ்க்கையில் கூட அவர்களால் தனித்து முழு முதற் சக்தியாக இருக்க முடியுமா?

என்ன இருந்தாலும் - நான் பெண்தானே என்று அவர்களே பல நேரங்களில் ஒப்புக் கொள்வதைப் பார்க்கலாம். ஆணின் மேலாதிக்கமோ - உதவியோ இல்லாமல் அவர்களால் இயங்க இயலாது என்பதே உண்மை.

பெண்களைத் தெய்வமாக ஆக்கியவர்கள் - அந்தப் பெண்களின் பருவ காலங்கள் - காமம் - திருமணம்- பிள்ளைப் பேறு இவற்றைப் பற்றியும் கதை புனைந்தாக வேண்டும். பாலியல் உறுப்புகள் பற்றியும் கூறியாக வேண்டும். அந்தக் கற்பனைகள் இறைத் தன்மையின் உயர்வைக் கீழ் இழுப்பதாக அமைந்து விடும். இந்தத் தெய்வங்கள் பற்றி திருக்குர்ஆன் என்ன கூறுகிறது?

**(உண்மை இறைவனை விட்டுவிட்டு பல) தெய்வங்களை அவர்கள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவை எதையும் படைக்கவில்லை. அவைகூட (அந்த இறைவனால்) படைக்கப் பட்டவையே! அவை தங்களுக்கு யாதொரு நன்மையும் தீமையும் செய்து கொள்ளச் சக்தி அற்றவை. மேலும், உயிர்ப்பிக்கவோ மரிக்கச் செய்யவோ உயிர் கொடுத்து**

எழுப்பவோ சக்தி அற்றவையாகவும் அவை இருக்கின்றன. (அல்குர்ஆன் 25:3)

இவர்கள் அறிவீனத்தால் அல்லாஹுவுக்கு ஆண் பெண் சந்ததிகளையும் கற்பிக்கின்றனர். அவனோ இவர்கள் வர்ணிப்பதிலிருந்து மிகத் தூய்மையானவனாகவும் உயர்ந்தோனுமாயிருக்கிறான். (அல்குர்ஆன் 6:100)

நடைமுறை வாழ்வில் தங்களுக்கு பெண் பிறப்பதை விரும்புவதில்லை; முகம் கோணுகிறது. ஆனால் இவர்களே பெண்களை முழு முதற் கடவுளாகவும் - இறைவனின் புதல்விகளாகவும் ஆக்குவதை இடித்துக் காட்டுகிறது திருக்குர்ஆன்.

- தாங்கள் விரும்பாதவையாகிய பெண் மக்களை அல்லாஹ்வுக்கு கற்பிக்கும் இவர்கள்... (அல்குர்ஆன் 16:62)
- (நபியே) உம்முடைய ரப்புக்கு பெண் மக்களும். அவர்களுக்கு ஆண் மக்களுமா?

  அல்லது அவர்கள் சாட்சிகளாக இருக்கும் நிலையிலா மலக்குகளைப் பெண்களாக நாம் படைத்தோம்? அல்லாஹ் பிள்ளைகளைப் பெற்றான் என்று கூறுவது அவர்கள் பொய்யாக கற்பனை செய்து கூறுவதுதான் என்பதை நீர் அறிந்து கொள்ளும். உறுதியாக அவர்கள் பொய்யர்களே! (அல்குர்ஆன் 37:149-152)

எனவே, பெண்ணே முழு முதல் தெய்வம் என்பதோ, பெண் இறைவனுக்குத் துணைவி என்பதோ, பெண் இறைவனின் தாய் (தேவமாதா) என்பதோ அல்லது இறைவன் பெற்றெடுத்த பெண் பிள்ளைகள் என்பதோ இஸ்லாம் மார்க்கம் ஏற்றுக் கொள்கின்ற கருத்து இல்லை. மாறாக, அது நியாய வாதங்களின் முன்பு அடிபட்டுச் சிதைந்து நொறுங்கித் தூள்தூளாகிற கருத்தும் ஆகும்!

■ ■ ■

மீண்டும் நினைவுபடுத்துதல்

**இறைஞானம் 1**

# கடவுள் நம்பிக்கை உள்ளவர்களே!

அன்புடையீர்!

தாங்கள் கடவுள் நம்பிக்கை உள்ளவரா? ஆம் என்றால் இறைவன் தங்கள் மீது நற்கருணைப் பொழிவானாக! அடுத்த கேள்வி - தாங்கள் ஒரு கடவுளை நம்புகிறீர்களா? பல கடவுள் இருக்கிறார்கள் என நம்புகிறீர்களா?- பல கடவுள்கள் இருக்கிறார்கள் என நம்புவீர்களானால் சில கேள்விகள் பிறக்கும்.

1. தாங்கள் 'கடவுள் இருக்கிறார்' என்று கூறி எந்த நாத்திகரிட மாவது (-கடவுள் மறுப்பாளரிடமாவது) விவாதம் செய்தது உண்டா? அல்லது கடவுளைப் பற்றி அறியாதவர்களிடமும் குழந்தைகளிடமும் கடவுள் பற்றிய உண்மையைக் கூறியது உண்டா?

அந்த விவாதத்தில் - இந்த உலகம் உள்ளிட்ட அண்ட சராசரங்களின் இயக்கம் பற்றி - ஆதாரப் பிடிப்பு இல்லாமல் சுழலும் கோளங்கள் பற்றி, தவறாது ஏற்படும் பருவ காலங்கள் பற்றி, அதனால் ஏற்படும் உலகச் செழிப்பு பற்றி, அவற்றிலுள்ள அழகான ஒழுங்கான நியதி பற்றிச் சுட்டிக் காட்டியிருப்பீர்கள்.

துள்ளி வரும் ஒரு துளி ஜீவ நீரினால் தாயின் வயிற்றில் குழந்தை உருவாகும் அற்புதம் பற்றியும் சொல்லியிருப்பீர்கள்.

இன்னும் உலகத்து விநோத அற்புதங்கள் பற்றிக் குறிப்பிட்டு விட்டு என்ன கேள்வி கேட்கிறீர்கள்? கடவுள் நம்பிக்கையை உறுதி செய்ய எந்த விதமான வினாவை விடுக்கிறீர்கள்?

"இந்த அற்புதங்களை எல்லாம் ஒழுங்குபடுத்தும் ஒரு சக்தி உண்டு என்பதை இப்போது உணருகிறீர்களா?" இப்படித்தானே கேட்பீர்கள்?

ஆகவே, கடவுள் நம்பிக்கை என்பதே "ஒன்று" (ஒரு கடவுள்) என்பதிலிருந்துதான் தொடங்குகிறது.

ஆனால், சில அன்பர்கள் பல கடவுள்கள் உண்டு என்று நினைக்கிறார்கள்; வழிபடுகிறார்கள். இது 'ஒரே தெய்வம்' என்ற ஆரம்ப வாதத்திலிருந்து மாறுபடுகிறதே, உண்மையென உணர்ந்ததிலிருந்தும் முரண்படுகிறது அல்லவா!

ஒரு கடவுளுக்கு மேல் இரண்டு கடவுள்கள் இருக்குமானால் - மோதல் - பிணக்கு - சண்டை வந்தே தீரும். பல கடவுள் பற்றிய கதைகளைப் பாருங்கள். இரண்டு கடவுள்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டதாகவே இருக்கும்.

நிச்சயமாக, ஓர் இறைவன்தான் இருக்கின்றான் என்பதற்கு இன்னுமொரு உண்மையான தத்துவம் என்னவெனில், பக்தர்கள் தாங்கள் வணங்குகின்ற கடவுளைப் புகழ்ந்து போற்றுகின்றார்கள்! அப்படியானால் நம்மால் போற்றப்படக்கூடியவர் நம்மை விட உயர்ந்தவராகவும் தூய்மையாளராகவும் இருக்க வேண்டும்.

ஆகவே, நாம் போற்றும் கடவுள் நம்மைப் போல் தாய் தந்தையின் இச்சையால் - ஆசையால் - பிறந்தவராக இருக்க முடியாது. இறைவன் நம்மைவிடத் தூய்மையாளனாகவும்

உயர்ந்தவனாகவும் யாருடைய இச்சையாலும் பிறக்காதவனாகவும் இருக்க வேண்டும்.

பல கடவுள் என்ற கொள்கையே இறைவனுக்கு மனைவி, தாய், தந்தை, பிள்ளைகளை கற்பனை செய்யத் தூண்டுகிறது. மிக தாழ்ந்த இழிவான, கேவலமான மனிதனின் நிலைமைக்கு உயர்ந்த பரிசுத்தமான இறைவனை தரம் தாழ்த்தி விடுகிறது இந்த பல தெய்வக் கொள்கை.

கடவுள் பக்தி உள்ள நீங்கள் பல விஷயங்களுக்காக கடவுளைத் துதி செய்கிறீர்கள். குறிப்பாக உங்களுடைய தேவைகளுக்காகப் பிரார்த்தனை செய்கிறீர்கள். மனிதத் தேவைகளில் ஒன்று மனைவி. அவள் தரும் உடல்சுகம்!

நாம் போற்றுகின்ற இறைவன், மனிதத் தேவையான மனைவி மற்றும் உடல்சுகம் விரும்புகிறவனாக இருப்பானா? அப்படி நினைப்பதே பாவம்!

ஆகவே, இறைவன் என்பவன் மனைவி மற்றும் உடல்சுகம் விரும்பாதவனாக அத்தேவையற்றவனாக அந்தத் தேவையை விட்டும் மிகப் பரிசுத்தமானவனாக இருக்க வேண்டும். அவன் அப்படித்தான் இருக்கின்றான்.

இறைவனுக்கு மனைவி - குழந்தைகள் இருக்கிறார்கள் என்று நம்புவது அந்த இறைவனை அவமானப்படுத்துவதற்குச் சமம். மனைவி, குழந்தைகள் உள்ள கடவுள் கதைகளைக் கூர்ந்து கவனியுங்கள். சாதாரண மனிதக் குடும்பம் போல் சண்டை - சச்சரவு உள்ளதாக அந்த வர்ணனைகள் இருக்கும். இதுவும் இறைவனுக்கு அவப் பெயர் உண்டாக்குவது அல்லவா? சிறிது சிந்தித்துப் பாருங்கள்!

ஆக, இப்போது நீங்கள் ஒரு முடிவுக்கு வந்திருப்பீர்கள். நாம்

வணங்கும் இறைவன் மேற்சொன்னது போன்ற குணக் குறைவுகள் இல்லாதவனாக, அதே நேரத்தில் குண மேன்மைகள் மட்டுமே உள்ளவனாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள்.

அன்புள்ள வாசகரே! நீங்கள் இப்போது விரும்புவதைப் போல் - இறைவனைப் பற்றிக் கூறுகின்ற மதம் அல்லது மார்க்கம் உலகில் உண்டா?

- இறைவன் ஒருவனே!
- இறைவன் யாருக்கும் பிறக்கவில்லை; யாரையும் பெறவும் இல்லை.
- இறைவன் தேவைகளற்றவன்.
- இறைவனுக்கு மனைவியோ, புதல்வர்களோ, புதல்விகளோ இல்லை.
- அவன் மிகமிகத் தூய்மையாளன்.
- இப்படிக் கூறுகின்ற மார்க்கம் இந்த அகில உலகத்திலேயே ஒரே ஒரு மார்க்கம்தான்!
- அதுதான் இஸ்லாம்!
- இஸ்லாம் கூறுகின்ற இறைவன் - தூய்மையான இறைவன் அல்லாஹ்!

அல்லாஹ் எனும் இறைவன் அரேபிய நாட்டுக்கு மட்டும் உரிய இறைவன் இல்லை. உலகமாந்தர் அனைவரையும் பார்த்து அல்லாஹ், “நானே உங்கள் இறைவன் என்னையே வணங்குங்கள்” என்று தனது திருமறையான திருக்குர்ஆனில் கூறுகிறான்.

ஆகவே, அல்லாஹ்தான் உங்களின் இறைவன்.

அன்புள்ள வாசகரே! உண்மை தெரிய இத்தனை நாள் ஆகிவிட்டதே, இனி என்ன செய்வது? எனும் தயக்கம் வேண்டாம். உண்மையை உண்மை என்று ஒப்புக்கொள்ளக் காலக்கெடு எதுவும் இல்லை.

பேரன்புள்ளவரே! தாங்கள் ஒரு குயிலைப் போன்றவர்கள். இது நாள்வரை காக்கைக் கூட்டில் வளர்ந்தீர்கள். “இன்று ஒரே தெய்வம்” என்ற ஞானச் சிறகு முளைத்து விட்டது. சிறகை விரித்துப் பறந்து உங்களுக்குரிய ஞானவானத்தில் பறந்து வாருங்கள்.

ஒரே தெய்வமான அல்லாஹ்வின் பெயரால் வாக்குறுதி தருகிறோம்:

“நான் வணங்கும் ஒரே இறைவன் அல்லாஹ்தான்” என்ற இஸ்லாமிய ஞானம் கைவரப் பெற்ற இந்த நாள் முதல் தங்களுக்கு நற்சோபனங்கள் - நற்செய்திகள் - நல்வாய்ப்புகள் - வாழ்வில் நல்ல முன்னேற்றங்கள் ஏற்படப் போகின்றன.

■ ■ ■

இறைஞானம் 2

# உங்கள் கடவுள் எப்படிப்பட்டவர்?

கடவுள் நம்பிக்கை உள்ள வாசகரே! மக்களில் பலர் கடவுளை ஒப்புக் கொண்டாலும் அந்தக் கடவுள் தங்களுக்குரியவராக மட்டுமே இருக்க வேண்டும் என விரும்புகின்றனர்.

இன்னும் சிலர் தங்களது கடவுள் ஒரு குறிப்பிட்ட நாட்டுக்கு மட்டுமே உரியவர், குறிப்பிட்ட இனத்துக்கு மட்டுமே உரியவர் என்று நினைக்கிறார்கள். அன்புள்ள வாசகரே! இதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?

ஒப்புக்கொள்ள மாட்டீர்கள் ஏனென்றால் இறைவன் இதுபோன்ற குறுகிய வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டவன்.

நாடு - இனம் - சாதி இவற்றின் பொருட்டால் தனது படைப்பான மனித இனத்தை வேறுபடுத்த மாட்டான் இறைவன். அலட்சியமோ வெறுப்போ காட்டமாட்டான்.

இறைவனின் அன்பு அனைவருக்கும் உரியது. ஆனால், அவனது சிறப்பு மிகுந்த அன்பு யாருக்கு உரியது என்றால் இறைவனை உணர்ந்து அவன் மீது நம்பிக்கை கொண்டவர்களுக்குத்தான்.

எனவே, நம்பிக்கை என்பதே உண்மையான இறைவனின் அளவுகோல். இந்த இறை நம்பிக்கை எங்களுக்கு முழுமையாகச்

சொந்தம் என்று எந்த நாடும், இனமும், சாதியும் உரிமை கொண்டாட முடியாது.

பணக்காரர்களிடம் வீடு - மாடு- செல்வம் இருக்கலாம். அதற்காக கடவுள் நம்பிக்கை எங்களுக்குரிய சொத்து என்று கூற முடியாது. ஆனால் எந்தச் சொத்தும் இல்லாத ஓர் ஏழை "இறை நம்பிக்கையில் அனைவரையும் விட முதல் நபராக" இருக்கலாம், இருக்க முடியும்!

சில மதங்களில் "நாங்களே இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள்! நாங்கள் வாழும் பூமியே புண்ணிய பூமி" என்று கூறிக் கொள்கிறார்கள்.

சில மதங்களில் பணக்காரர்கள் என்றால் வழிபாட்டில் முதலிடம் கொடுப்பார்கள். அதிகமான நன்கொடை கொடுத்தால் அவர்களுக்கு முன்னிடம் தரப்படும்.

அன்புள்ள வாசகரே!

இவ்விதம் இறைவனை நாடு, இனம், சாதி எனும் குறுகிய கூட்டுக்குள் அடைப்பது தவறு என்று கருதுகிறீர்களா?

பணக்காரர் என்பதற்காக இறைவன்முன் சலுகை கொடுக்கப்படு வதைத் தாங்கள் விரும்பவில்லை அல்லவா?

உலகில் (குறிப்பிட்ட) ஒரு நாடு, (குறிப்பிட்ட) ஓர் இனம், (குறிப்பிட்ட) ஒரு சாதி என்ற கூட்டுக்குள் அடைபடாமல் அகில உலகத்திற்குமான ஒரு மதம் அல்லது மார்க்கம் உண்டா?

- இறைவன் எல்லா நாடுகளுக்கும் உரியவன்.
- எல்லா இனத்தவருக்கும் மொழியினருக்கும் உரியவன்.
- சாதிப் பாகுபாடு பார்க்கக் கூடாது. உலக மக்கள் அனைவருமே ஒரே தாய், தந்தைக்குப் பிறந்த சகோதரர்களே!

- பணத்தையோ - சமூகத் தகுதியையோ பெரிது எனக் கருதக் கூடாது. இறை நம்பிக்கை ஒன்றே அளவுகோல்.

  இப்படி அறிவிக்கின்ற, ஒரே மார்க்கம் இஸ்லாம் மார்க்கம் மட்டும்தான்!

இஸ்லாம் மார்க்கம் கூறுகின்ற இந்த நற்செய்திகள் உங்களுக்குப் பிடித்திருக்கிறது என்றால் இஸ்லாம் மார்க்கத்தின் திருமறையான திருக்குர்ஆனைப் படியுங்கள். இறைத் தூதரான முஹம்மது (ஸல்) அவர்களின் பொன்மொழிகளைப் படியுங்கள்.

- உலக மக்களே!
- ஆதம் என்ற முதல் மனிதரின் பிள்ளைகளே!

என்றுதான் இஸ்லாம் உலக மக்களை அழைத்து நற்செய்தி கூறுகிறது!

பள்ளிவாசல்களிலோ - மக்கா எனும் புனித இடத்திலோ பணக்காரர்களுக்கு என்று முன்னிடம் - முன்வரிசை இல்லை.

இத்தகைய இஸ்லாம் மார்க்கம் தங்களுக்குப் பிடித்திருக்கிறதா? பிடித்திருக்கிறது என்றால் மேலும் அறிந்து கொள்ள வாருங்கள்!

நல்ல ஞானம் பற்றி - நல்ல விஷயங்கள் பற்றி அறிந்து கொள்ளத் தயக்கம் காட்டாதீர்கள். ஞானத்தை அறிந்து கொள்ளாமல் தயங்குவது அஞ்ஞானத்திற்கு இட்டுச் செல்லும்.

அன்புள்ள வாசகரே!

தாங்கள் ஒரு தேனீயைப் போன்றவர்! தேன் கிடைக்கும் இடம் நோக்கிப் பறப்பதே உங்கள் கடமை. இஸ்லாம் என்பது ஞானத் தேன் நிரம்பிய பூக்கள் நிறைந்த நந்தவனம். பறந்து வாருங்கள்! ஆசை தீர ஞானத்தேன் அருந்திட வாருங்கள்.

■ ■ ■

இறைஞானம் 3

# கடவுளுக்கு காணிக்கை தேவையா?

கடவுள் பக்தி உள்ள வாசகரே!

இறைவன் இருக்கிறான் என்று நம்பிய உங்களுக்காக இறைவன் நிச்சயமாக நற்கருணைப் பொழிவான்.

ஆனால், நமது நம்பிக்கை எப்படிப்பட்டது என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இறைவனுடைய சன்னிதானத்தில் சில பழங்களும் பூக்களும். உணவு பாணங்களும் பொற்காசுகளும் காணிக்கை செலுத்தி விடுவதால் அவனுடைய அருட்கொடைகளுக்கு கைம்மாறு ஆகி விடுமோ?

மனிதன் தாய் செய்த உபகாரங்களுக்கு கைம்மாறு செய்ய முடியாத நிலையில் இருக்க, இறைவனுக்கு அவனால் எவ்விதம் கைம்மாறு செய்ய முடியும்?

- தாய்க்கு தனது குழந்தையின் புன் சிரிப்பே போதுமானது!
- அம்மா! அம்மா! என்று அழைக்கின்ற அன்பு போதுமானவை!

இறைவன் தன் பக்தனிடமிருந்து எந்தக் காணிக்கையையும்

விரும்பவில்லை. இறைவனின் நினைப்பில் பக்தனின் ஈடுபாடு - எப்போதும் இறைவனைப் பற்றிய புகழ் மொழிகள், நன்றியுணர்வு இவற்றையே இறைவன் விரும்புகிறான்.

- இந்த எண்ணம் தங்களுக்கு ஏற்பட வேண்டுமானால் இறைவன் எவ்விதத் தேவைகளுமற்றவன் என்ற உண்மையைப் புரிய வேண்டும். “எனக்குக் காணிக்கை செலுத்து” என்று சொல்லாதவன் இறைவன் எனும் பேருண்மையையும் புரிய வேண்டும்.

இறைவன் தேவைகளற்றவன்; அவன் தனக்கென உன்னிடமிருந்து எந்தப் பொருளையும் காணிக்கையாகப் பெற விரும்பவில்லை என்று கூறுகின்ற மார்க்கம் அல்லது மதம் உலகில் உண்டா? உண்டு அதுதான் இஸ்லாம்.

பள்ளிவாசல்களுக்குச் செல்லும் முஸ்லிம்களைப் பாருங்கள். அவர்கள் எந்தப் பொருளையும் காணிக்கையாக எடுத்துச் செல்வதில்லை.

‘ஒழு’ என்கின்ற உடற்சுத்தம் செய்து கொண்டு செல்கிறார்கள். தூய்மையாளனான இறைவன் முன் நாமும் தூய்மையாளராக நின்று தொழ வேண்டும் என்பதுதான் அதன் தத்துவம்.

தொழுகையின் போது உடல் மட்டுமின்றி உள்ளமும் தூய்மையாக இருக்க வேண்டும். தொழுகையில் இதைத் தவிர வேறு எந்தக் காணிக்கையையும் இறைவனுக்குச் செலுத்த வேண்டியதில்லை!

அன்புள்ள வாசகரே! தங்களது மனதில் ஒரு கேள்வி ஏற்படக்கூடும். இறைவனுக்கு காணிக்கை வேண்டாம் என்றால் இறை அருளால் வருமானம் பெருகினால் - நாமே சுவைத்து அனுபவித்துக் கொள்ள அனுமதிக்கிறதா இஸ்லாம்?

இல்லை! “இறை அருளால் கிடைத்த செல்வத்தை உன்னைச் சுற்றி உள்ளோருக்குக் கொடு” என்று கூறுகிறது இஸ்லாம்!

“அப்படிக் கொடுப்பதால்தான் தூய்மை அடைகிறாய் நீ” என்றும் இஸ்லாம் அறிவுறுத்துகிறது. இப்படிக் கொடுப்பதற்குப் பெயர் ஜகாத். இந்த “ஜகாத்” எனும் சொல்லுக்குப் பொருளே தூய்மை என்பதுதான்!

- நம் விருப்பம்போல அள்ளி இறைக்கவும் அனுமதி இல்லை.

ஏழைகள், நற்செயல் புரிவோர் என்று வரிசைப்படுத்திக் கொடு என்றும் இஸ்லாம் ஆணையிடுகிறது.

அன்புள்ள வாசகரே!

இந்தச் செய்திகளில் முக்கியமாக நீங்கள் கவனிக்க வேண்டியது. இஸ்லாம் மார்க்கத்தின் இறைவன் தேவை எதுவுமற்றவன்; அருள் செய்பவன்; தனக்கென காணிக்கை வேண்டாதவன். ஆனால், அதே சமயத்தில், தான் அருளிய செல்வத்தை தனது பக்தர்கள் பிறருக்குத் தர வேண்டுமென்று உத்தரவு இடுபவன்.

பேரன்புள்ளவரே! இத்தகைய இறைவனை அல்லவா இதுநாள் வரை தாங்கள் தேடிக் கொண்டிருந்தீர்கள்!

இதோ - உங்கள் இறைவன்!

இதோ - உங்கள் மார்க்கம்!

“முஸ்லிம்களுக்கு மட்டுமே உரியவன் அந்த இறைவன்; அவர்களுக்கு மட்டுமே உரியது அந்த மார்க்கம்” என்று ஒருபோதும் நினைத்து விடாதீர்கள்.

வாசகராகிய தங்களுக்கும் தங்களது குடும்பத்தாருக்கும் மற்றும் உலகத்தார் அனைவருக்குமான இறைவன்தான் அல்லாஹ். அவனது மார்க்கம்தான் இஸ்லாம்!

உங்களுக்குரியதை உங்களிடம் சேர்த்து விட்டோம் இது பற்றிச் சிந்திக்க வேண்டியது அன்பான வாசகரான தாங்களே!

■ ■ ■

இறைஞானம் 4

# பழைய மதத்தை விட வேண்டுமா?

இறை பக்தி உள்ளவர்களே!

உங்களுக்கு ஐயம், சந்தேகம் ஒன்று இருக்கலாம். "ஒரே ஓர் இறைவன்" என்ற தத்துவத்தை ஒப்புக் கொண்டால் உங்களுடைய பழைய மதத்தைக் கைவிட வேண்டுமா? என்பதே அந்தச் சந்தேகம், ஐயம்!

உங்களுடைய பழைய மதமே - ஒரே ஓர் இறைவன் தத்துவத்தை ஏற்றிருப்பதுதான். ஆராய்ந்து பார்த்தால் இது புரியும்.

இந்து மதம் என்றால் அதனுடைய ஆணிவேர் 'பரப் பிரம்மம்' எனும் ஒரு தெய்வம்தான். தமிழ்ச் சித்தர்களில் மூத்தவரான திருமூலர் "ஒன்றே குலம்; ஒருவனே தேவன்" என்றுதான் கூறியிருக்கிறார். "ஒருவனே...." என்று சிறப்பித்து 'ஏகாரம்' இட்டு அவர் அழுத்திச் சொல்லியிருக்கிறார். ஆகவே ஒரு தெய்வக் கொள்கை உங்களுக்கு முரண்பட்டதல்ல.

"ஆயிரம் தெய்வங்கள் உண்டு என்று தேடி அலையும் அறிவிலிகாள்" என்று பாரதியார் சாடியிருக்கிறார். இஸ்லாம் அவ்விதமான கடுமையைக் காட்டவில்லை; மாறாக இனிமை ததும்ப "ஒருவனே தேவன்" என்றுதான் கூறுகிறது.

இந்து மத ஞானிகள் பலரும் ஞான முதிர்ச்சி பெற்ற பின் காடு, மலை, வனம், வனாந்தரங்களில் தியானம் செய்யும்போது

பல தெய்வங்களை வணங்கவில்லை. ஏகாந்தமாக ஏக இறைவனையே தொழுதனர்.

பல தெய்வங்களையும் - சிலை, படம் போன்றவற்றை தொழுவதையும் “மந்த ஞானம்” என்றே இராமலிங்க அடிகள் கூறுவார். “உயர் ஞானம்” என்பது உருவம் அற்ற - இணை - துணை இல்லாத இறைவனைத் தொழுவதே ஆகும்.

வைணவத்திலும் பல தெய்வங்களை “மறந்தும் புறம் தொழார் வைணவர்” என்றே எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது.

பைபிளில்கூட பழைய ஏற்பாட்டில் “கர்த்தர்” என்ற ஏக இறைவனையே சுட்டிக்காட்டும் சொற்கள் வரும். கிறிஸ்துவ தேவாலயத்தின் பிரார்த்தனையில் “இயேசு கிறிஸ்து மூலமாக கர்த்தரை வேண்டிக் கொள்கிறோம்” என்ற வசனம் வரும்.

ஆகவே, எல்லா மதங்களிலும் “ஒரு தெய்வக் கொள்கை” என்பது ஆழநீர் ஓட்டமாக அடி நாதமாக இருப்பதைக் கவனிக்கலாம்.

பல தெய்வ வணக்கத்தைக் கைவிட்டு - ஒரு தெய்வ வழிபாடு கொள்ளுதல் என்பது உங்களுடைய மதத்திற்கு எதிர்ப்பானது இல்லை.

இடையில் கலந்துவிட்ட கலப்படமான எண்ணத்தை “மந்த ஞானத்தைக்” கைவிட்டு ஆழநீர் ஓட்டத்தை அடிநாதத்தை ஒப்புக் கொள்வதில் என்ன தயக்கம்?

மதம் என்பது வெறும் வேஷங்களும், கோஷங்களும் இல்லை. நம்பிக்கை என்பதுதான் அடித்தளம். அந்த நம்பிக்கையின் நற்தூய்மைதான் ஒரு தெய்வ நம்பிக்கை.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.* என்றுதான் திருவள்ளுவர் கூறுவார்.

பல தெய்வ பற்றின் வெளிப்பாடு கதைகளாக மட்டும் இருப்பதைக்

.............................................

* ஆசை ஏதும் இல்லாதவனாகிய இறைவன் மீது ஆசை கொள்க; அவன் மீது ஆசை கொள்வது நம் ஆசைகளை விடுவதற்கே.

காணலாம். பற்றற்றான் என்பது இஸ்லாம் கூறுகின்ற “ஒப்பு உவமையற்ற, எவ்வித தேவையுமற்ற அந்த ஒரு தெய்வம்தான்.”

இந்த ஒரு தெய்வக் கொள்கை என்பது அரேபியாவில் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மட்டும்தான் முதன் முதலாக ஏற்படுத்தினார்; பரப்பினார் என்று திருக்குர்ஆன் கூறவில்லை.

உலகில் உள்ள ஒவ்வொரு சமுதாயத்தவருக்கும் தெய்வக் கொள்கையை எடுத்துக்கூற இறைத்தூதர் ஒருவர் அனுப்பப் பட்டார் என்று திருக்குர்ஆன் ஓதுகிறது. அப்படியானால் இந்தியாவுக்குள் பல தூதர்கள் வந்திருப்பார்கள். அவர்கள் ஒரு தெய்வக் கொள்கையை பரப்பியிருப்பார்கள்.

நாளடைவில் நலிவு - நசிவு தோன்றி பல தெய்வ வணக்கம் வந்திருக்கக்கூடும். அரேபியாவிலேயே அது போன்று ஒரு தெய்வக் கொள்கை மங்கி பல தெய்வ வணக்கம் வந்த போதுதான் நபிநாதர் வந்தார்.

இறைவனுக்காகக் கட்டப்பட்ட மக்காவின் ‘கஅபா’ ஆலயத்திற்குள்ளும் வெளியிலும் 360 சிலைகள் நடப்பட்டன; வைக்கப்பட்டன.

“மந்த ஞானம்” தோன்றிய அந்த நேரத்தில்தான் “நிறை ஞானம்” எனும் ஒரு தெய்வ வணக்கத்தை நிலை நாட்ட நபி நாயகம் பாடுபட்டார். மெல்ல மெல்ல அரபு மக்கள் இடையில் வந்த நம்பிக்கைகளைக் கைவிட்டு முதன் முதலான - ஆரம்ப காலத்து ஒரு தெய்வ வணக்கத்தை மேற்கொண்டார்கள்.

அதுபோலவே நீங்களும் இடையில் புகுந்த பல தெய்வ வணக்கத்தைக் கைவிட்டு தொடக்க கால நம்பிக்கையான ஒரு தெய்வ வணக்கத்தை மேற்கொள்ளப் போகிறீர்கள்.

- அநாதைக்கு முன்னோர்களின்
  ஆஸ்தி கிடைத்தது போல....
- கலங்கல் நீர் அருந்தியவனுக்கு
  சுனை நீர் கிடைத்தது போல...

- கரடி முடித்தலைக்கு
  முடி அலங்காரம் கிடைத்தது போல....

ஏற்கெனவே உங்களுக்கு இருக்கிற கலப்படமான நம்பிக்கையில் ஒரு தெளிவு - கனக்கச்சிதம் - கம்பீரம் கிடைக்கச் செய்வதுதான் ஒரு தெய்வக் கொள்கை.

நமக்கு முந்தைய தலைமுறையினரின் வழி முறையை எப்படிக் கைவிடுவது என்ற தயக்கம் இருக்கலாம்.

அந்தத் தலைமுறையினரின் உடை, நடை, பாவனையை அப்படியே வைத்திருக்கிறோமா? இல்லை ஏந்தானதை (சவுகரிய மானதை) ஏற்றுக் கொண்டு மற்றவற்றையே கைவிடுகிற நாம், இதில் மட்டும் தயக்கம் காட்டுவது ஏன்?

முந்தையது எது? என்பதில் ஏற்பட்ட குழப்பத்தால் வருவதுதான் இந்தத் தயக்கம்! முந்தைய தலைமுறைக்கும் முந்தைய தலைமுறையின் கொள்கைதான். "ஒரு தெய்வக் கொள்கை" என உணர்ந்தால் தயக்கம் போய்விடும்.

அடுத்த தயக்கம் முஸ்லிம்களைப் போல் உடை, உருவம், உணவு என்பதை எல்லாம் ஏற்க வேண்டுமா? என்பது!

அவையெல்லாம் இரண்டாம் பட்சமே! முதலில் தேவைப்படுவது "ஒரு தெய்வ நம்பிக்கை!" உள்ளத்தில், இதயத்தில் "ஒன்றே தேவன்" என்ற உறுதியான கொள்கைதான்!

ஆகவே இழப்பதற்கு எதுவுமில்லை, ஒரு தெய்வக் கொள்கையை ஏற்பதால்! இழப்பு என்பதெல்லாம் இருட்டே!

இருட்டை இழந்து விட்டோம் என்பதற்கு இரங்கற்பா பாடுவோமா?

ஒரு தெய்வக் கொள்கை - ஒளி வெளுப்பு; ஞானத்தென்றல்; கனதனக் களஞ்சியம்; ஏணி ஏற்றம்; மறை மொழி காட்டும் நிறைமொழி மாந்தரின் நேர்வழி! சிந்திப்பீர்! செயல்பட வாரீர்!

■ ■ ■

# முஸ்லிமாக ஆவதும் முஸ்லிமாக இருப்பதும் எப்படி?!

## நாம் அறிய வேண்டியது என்ன?

*கீழ்க்கண்ட உறுதிமொழியை கூறுவதன் மூலமாகவும் ஒருவர் முஸ்லிமாக ஆக முடியும்.*

"அஷ்ஹது அ(ன்)ல்லாயிலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரசூலுஹு"

*'அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என்றும், முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி பகர்கின்றேன்'*

*உங்களது வாழ்க்கையின் நோக்கத்தை நிறைவேற்றிட, உண்மைக்குப் பணிந்து உங்களைப் படைத்தவனை ஏற்றுக் கொள்வதற்கு இது தகுந்த நேரமல்லவா?*

## ஷஹாதா (நம்பிக்கை - உறுதிமொழி)

*இஸ்லாமின் முதல் தூண், நம்பிக்கை கொள்வதாகும். அந்த நம்பிக்கையை 'கலிமா' என்று கூறப்படும் 'ஷஹாதா' மூலம் வெளிப்படுத்துவதாகும். அஷ்ஹது அ(ன்)ல்லா இலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸுலுஹு.*

*பொருள்: அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என்று சாட்சி பகர்கின்றேன். முஹம்மது (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் அடியார் என்றும், அவனது தூதர் என்றும் நான் சாட்சி பகர்கிறேன்.*

## உறுதிமொழி : அஷ்ஹது அ(ன்)ல்லாயிலாஹ இல்லல்லாஹு

*உறுதிமொழியின் முதல் பாகத்தில் இறைவன் மனித சமுதாயத்திற்கு அருளியுள்ள மிக முக்கியமான உண்மை அடங்கியுள்ளது. எல்லாம் வல்ல அல்லாஹ்வைத் தவிர வணங்குவதற்குரிய இறைவன் வேறு யாருமில்லை என்பதே அது. இறைவன் குர்ஆனில் குறிப்பிடுகின்றான்;*

> உங்களுக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர்களுக்கெல்லாம், "நிச்சயமாக என்னைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லவே இல்லை என்னையே நீங்கள் வணங்குங்கள்" என்று நாம் வஹ்யி அறிவிக்காமலில்லை.
>
> *(அல் குர்ஆன் 21:25)*

*இந்தக் கலிமாவைச் சொல்வதன் மூலம், அனைத்துப் படைப்புகளையும் படைத்தவன் அல்லாஹ் ஒருவனே என்றும், அவன்தான் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொருவர் மீதும், ஒவ்வொரு பொருளின் மீதும் மிக உயர்ந்த அதிகாரம் படைத்தவன் என்பதை ஒரு முஸ்லிம் ஏற்றுக் கொள்கிறான்.*

*இதன்மூலம், அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும், எந்தப் பொருளும் வணக்கத்திற்குரியன அல்ல என்றும், அவனையே சார்ந்து, அவன்பால் நம்பிக்கை கொண்டு தன்னுடைய விசுவாசத்தையும், ஈடுபாட்டையும், கீழ்ப்படிதலையும் அவனுக்கே உரித்தாக்குகின்ற வகையில் ஒரு முஸ்லிம் தனது இதயத்தையும், உள்ளத்தையும் இறைவனுக்கு நெருக்கமாக்கிக் கொள்கிறான்.*

*இறைவனைத் தவிர பிறவற்றை (மலக்குகள், முஹம்மது நபி (ஸல்) உள்ளிட்ட இறைத்தூதர்கள், சமயத்துறவிகள்,*

சிலைகள், சூரியன், சந்திரன், மரம் ஆகியன) வணங்குமாறு கட்டளையிடுவது இஸ்லாமின் அடிப்படைக் கொள்கைக்கு முரணானதாகும். ஒருவன் தனது இறப்பிற்கு முன்னர் அதற்காக வருந்தி மன்னிப்புக் கேட்டாலே தவிர இது மன்னிக்க முடியாத பாவமாகும். அனைத்து வகையான வணக்க வழிபாடுகளும் ஒரே இறைவனாகிய அல்லாஹ்வை நோக்கியே இருக்கவேண்டும்.

இறை நிராகரிப்பு என்பது, மனிதர்களின் கரங்களிலும் கற்பனையிலும் உருவான மரம் மற்றும் கல்லால் ஆன ஆண் கடவுள்கள், பெண் தெய்வங்களை நம்புவது மட்டுமல்ல மாறாக, இஸ்லாமைத் தவிர அனைத்து வகையான பிற கொள்கைகள், மூடப்பழக்கங்களை நம்புவதும், சிறப்பு அதிகாரம் படைத்தவர்களாகவும் புனிதமானவர்களாகவும் மதத் தலைவர்களை மதித்து அவர்களை நேசிப்பதும் அவர்களுக்குக் கீழ்ப்படிவதும் இணைவைத்தலாகும்.

மேலும் இந்த இறை நிராகரிப்பாகிறது, ஜோதிடம், கைரேகை பார்த்தல், அதிர்ஷ்ட மந்திரம், குறி சொல்லுதல், மறைவான விஷயங்களைத் தெரிந்து கொள்ள முற்படுதல், சமயஞானிகளின் கல்லறைகளுக்கும், நினைவிடங்களுக்கும் சென்று தமக்காக இறைவனிடம் பரிந்துரைக்குமாறு அவர்களிடம் வேண்டுதல் போன்ற செயல்களையும் உள்ளடக்கியதாகும். அல்லாஹ்விடமே நேரடியாகப் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

தொழுகை, நோன்பு, வேண்டுதல், அடைக்கலம் நாடுதல், விலங்குகளைப் பலியிடுதல் போன்ற அனைத்து வகையான வணக்க வழிபாடுகளும் இறைவனுக்காகவே செய்யப்பட வேண்டும்.

இறைவனை மகிழ்விக்கும் செயல்களில் ஈடுபடுவது, பேசுவது, அவன் கட்டளையிட்ட, ஊக்குவித்த விஷயங்களை தனித்து நேரடியாகவோ அல்லது கூட்டாகவோ செய்வது ஆகியவையும் வணக்க வழிபாடுதான். ஆகையால், வணக்கம் என்பது இஸ்லாமின் ஐந்து கடமைகளை நிறைவேற்றுவதோடு மட்டும் குறுகிப்போய் விடவில்லை. அது வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சங்களையும் உள்ளடக்கியது.

ஒருவன் தனது குடும்பத்திற்கு உணவளிப்பது, இன்னொருவனின் மகிழ்ச்சிக்காகச் சில வார்த்தைகளைக் கூறுவது போன்ற செயல்களும் இறைவனை மகிழ்விக்கும் நோக்கில் செய்யப்பட்டால் அதுவும் ஒரு வணக்க வழிபாடேயாகும். வணக்க வழிபாடுகள் அனைத்தும் இறைவனுக்காக மட்டுமே சரியான முறையில் செய்யப்பட வேண்டும் என்பதே இதன் பொருள்.

## உறுதிமொழி : வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹூ வரசூலுஹூ

உறுதிமொழியின் இரண்டாவது பகுதியின் பொருள் முஹம்மது (ஸல்) அவர்கள், இறைவனின் தூதராகவும், அவனது அடியாராகவும் இருக்கின்றார்கள் என்பதாகும். இது ஒருவர் நபிகளாரின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து அவற்றைப் பின்பற்ற வேண்டியதை உணர்த்துகின்றது. நபி (ஸல்) கூறியவற்றையும், போதனைகளையும், அவர்கள் தம் நடைமுறைகளையும் நம்ப வேண்டும். எதனைச் செய்யக்கூடாது என்று தடுத்துள்ளார்களோ, அவற்றைத் தவிர்த்திட வேண்டும். அவர்கள் போதித்தபடி இறைவனை மட்டுமே வணங்க வேண்டும். இறைவனால் நபிகள்

*நாயகம் (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட வேத வெளிப்பாடுகளே அவர்களின் போதனைகளாகும்.*

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், மனித குலமே பின்பற்றத்தக்க அளவிற்கு முன் மாதிரியாக வாழ்ந்து காட்டினார்கள். எனவே அவர்களது வாழ்க்கையையும், நடைமுறைகளையும் பின்பற்ற முயற்சிக்க வேண்டும். இறைவன் கூறுகிறான்;*

> "நிச்சயமாக நீர் மகத்தான நற்குணமுடையவராகவே இருக்கிறீர்." *(அல் குர்ஆன் 68:4)*

*மேலும் இறைவன் கூறுகின்றான்;*

> "எவர்கள் அல்லாஹ்வையும் இறுதிநாளையும் உறுதியாக நம்புகிறார்களோ அவர்கள் பின்பற்றி நடக்கவேண்டிய அழகான உதாரணம் நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடமே இருக்கிறது." *(அல் குர்ஆன் 33:21)*

*தம்முடைய சொற்களிலும், செயல்களிலும், நடவடிக்கை களிலும் வாழ்க்கையின் அனைத்து அம்சங்களிலும் குர்ஆனின் போதனைகளின்படி வாழ்ந்திடவே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அனுப்பப்பட்டார்கள். நபிகளாரின் மனைவி அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் நபிகளாரின் பண்புகள் பற்றி கேட்டபோது, அதற்கு அவர் 'குர்ஆனே அவர்களது பண்பாக இருந்தது' என்று கூறினார்.*

*கலிமாவின் இரண்டாவது பாகம், நாம் நம் வாழ்க்கையின் அனைத்து விஷயங்களிலும் நபிகளாரைப் பின்பற்றி வாழ வேண்டும் என்பதேயாகும். இறைவன் கூறுகின்றான்:*

> "(நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராக! நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான்." *(அல் குர்ஆன் 3:31)*

"…. ஆகவே, நம் தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் (மனமுவந்து) எடுத்துக் கொள்ளுங்கள். அவர் எதைவிட்டும் உங்களைத் தடுத்தாரோ, அதைவிட்டு நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்." *(அல் குர்ஆன் 59:7)*

*முஹம்மது (ஸல்) அவர்கள் இறைவனின் இறுதித்தூதர். அவர்களுக்குப் பிறகு இறைத்தூதர்கள் யாரும் வரமாட்டார்கள் என்பதும் இதன் பொருளாகும்.*

"(நம்பிக்கையாளர்களே!) உங்களில் உள்ள ஆண்களில் ஒருவருக்கும் முஹம்மது (நபி அவர்கள்) தந்தையாக இருக்கவில்லை. எனினும் அவர் அல்லாஹ்வுடைய தூதராகவும் நபிமார்களுக்கு (இறுதி) முத்திரையாகவும் (இறுதி நபியாகவும்) இருக்கிறார். (ஆகவே, அவருக்குப் பின்னர் ஒரு தூதரையும் அனுப்ப மாட்டான்) அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனாக இருக்கிறான்."

*(அல் குர்ஆன் 33:40)*

*முஹம்மது (ஸல்) அவர்களின் நபித்துவத்தின் மீது நம்பிக்கை கொள்வதென்பது அவர்கள் கொண்டு வந்த வழி காட்டலிலும், சுன்னாவிலும் (அவர்களது செயல்பாடுகள் அமுதமொழிகள்) நம்பிக்கை கொள்வதையும் உள்ளடக்கியதாகும். அவர்களது வழிகாட்டுதல்களை விசுவாசமாகப் பின்பற்ற வேண்டும் என்பதையும் அது வலியுறுத்துகிறது. முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரே.*

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், தூய்மையான நேரிய பண்பும், அசாதாரணமான நேர்மையும், அல்லாஹ்வின்பால் அசைக்க முடியாத நம்பிக்கையும் இஸ்லாமின்பால் உறுதிப்பாடும் கொண்டிருந்த போதிலும்,*

அவர்கள் இறைத்தன்மை கொண்டவர்கள் அல்ல. எனவே, முஸ்லிம்கள் நபிகளாரை வணங்கமாட்டார்கள்.

## நான் எப்படி முஸ்லிமாக ஆவது?

‘இறைவனின் விருப்பத்திற்குக் கீழ்ப்படிபவன்’ என்பதே முஸ்லிம் என்ற வார்த்தையின் பொருளாகும். (இனம், தேசியம், குலப் பின்னனி ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டு) முஸ்லிமாக ஆவது மிக எளிதானது. அது எந்தவிதமான முன் நிபந்தனையுமற்ற ஒரு எளிய வழிமுறையாகும். ஒருவர் தனித்தோ அல்லது பிறருடைய முன்னிலையிலோ தன்னை இஸ்லாமில் இணைத்துக் கொள்ளலாம்.

ஒருவர் முஸ்லிமாக வேண்டுமென்று விரும்பினால், இஸ்லாம் ஓர் உண்மையான மார்க்கம் என்ற பற்றுறுதியும் அதன்பால் ஆழமான நம்பிக்கையும் அவருக்கு இருந்தால், எந்தத் தாமதமுமின்றி, நம்பிக்கையின் உறுதிமொழியான கலிமாவைச் சொல்லி அவர் இஸ்லாமில் இணையலாம். இஸ்லாமின் ஐந்து தூண்களில் கலிமா முதலாவதும் முக்கியமானதுமாகும். உண்மையான நம்பிக்கையுடனும், பற்றுறுதியுடனும் கலிமா சொல்வதன் மூலம் ஒருவர் இஸ்லாமிற்கு வந்து விடுகிறார்.

கலிமாவை (நம்பிக்கை உறுதிமொழியை) அரபியில் சொல்லிட முயற்சி செய்யுங்கள். “அஷ்ஹது அ(ன்)ல்லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீகலஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு“.

இந்த நிகழ்ச்சிக்கு சாட்சி யாரும் தேவையில்லை. இதற்காகப் பெரிய விழா நடத்த வேண்டிய அவசியமும் இல்லை. ஏனெனில் இது உங்களது தனிப்பட்ட உறுதிமொழியே

ஆகும். எனினும், முடிந்தால் முஸ்லிம்கள் சாட்சிகளாக இருக்க நீங்கள் கலிமாச் சொல்லி இஸ்லாமில் இணைவது விரும்பத்தக்கதாகும். ஆனால், இதற்காகவோ அல்லது வேறு காரணங்களுக்காகவோ இஸ்லாமில் இணைந்திடத் தாமதம் செய்யாதீர்கள். நீங்கள் முஸ்லிம் ஆன பிறகு குளித்து விட்டு இரண்டு ரகஅத் தொழ வேண்டும்.

இஸ்லாமில் சேரும் எண்ணத்துடன் உடல் முழுவதையும் நன்றாகச் சுத்தம் செய்து குளிப்பதற்கு 'குஸ்ல்' என்று பெயர். கடந்த காலத்தில் செய்த தவறுகளையும், பாவங்களையும் துடைத்தெறிந்து, அதுவரை நிகழ்ந்த செயல்களுக்காக அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோருவதற்கான ஒரு அடையாளப் பூர்வமான நடவடிக்கையே இது எனலாம்.

## கடந்தகாலப் பாவங்கள் மன்னிக்கப்படுதல்

> ".... அல்லாஹ்வைத் தவிர (இவர்களின்) குற்றங்களை மன்னிப்பவன் யார்?" *(அல் குர்ஆன் 3:135)*

முற்றிலும் இறைவனின் விருப்பத்திற்காகவே நீங்கள் இஸ்லாமில் இணைகிறீர்கள். உங்களது கடந்த காலப் பாவங்கள் மன்னிக்கப்பட்டு நீங்கள் இறைப்பற்றும், நேர்மையும் கொண்ட ஒரு புதிய வாழ்க்கையைத் துவக்குகின்றீர்கள். இஸ்லாமில் இணைவதற்கு விரும்பிய ஒருவரிடம் நபிகள் நாயகம் (ஸல்), 'உம்முடைய கடந்த காலப் பாவங்கள் மன்னிக்கப்படும்' என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (ஒரு தோழரிடம்) "இஸ்லாமில் நீர் இணைவது, முன்னர் நீர் செய்த

பாவங்கள் அனைத்தையும் அழித்துவிடும் என்பது உமக்குத் தெரியாதா?" (முஸ்லிம்)

"ஒருவன் மனப்பூர்வமாக இஸ்லாமை ஏற்றுக் கொண்டால், அல்லாஹ் அவனது முந்திய அனைத்துப் பாவங்களையும் மன்னித்து விடுகிறான். அதற்குப் பின், கணக்கு பைசல் செய்யும் பணி துவங்கும். ஒவ்வொரு நற்செயலுக்கும் 10 முதல் 700 மடங்கு வரை வெகுமதிகள் அளிக்கப்படும். அல்லாஹ் பாவமன்னிப்பு வழங்காவிட்டால் மட்டுமே தீய செயல்கள் பதிவு செய்யப்படும்" என நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். (புகாரி)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"சமயம் எளிதானது. யாரொருவர் சமயத்தை பளுவாக்கிக் கொண்டாரோ அவருக்கு அதே வழியில் தொடர்ந்து செல்வது சிரமமாகி விடும். எனவே அதில் நீங்கள் அதி தீவிரம் காட்ட வேண்டாம். ஆனால், முழுமையின் பக்கம் நெருங்கி வர முயற்சிகள் மேற்கொண்டு நற்செய்திகளைப் பெற்றிடுங்கள். காலை நேரங்களிலும், பிற்பகலிலும், இரவின் இறுதி நேரங்களிலும் தொழுகை புரிந்து நன்மையடையுங்கள்." (புகாரி)

ஒருவர் இஸ்லாமை ஏற்றுக் கொள்கிறார் என்றால் அவர் தனது பழைய வாழ்க்கைக்காகவும், நம்பிக்கைகளுக்காகவும் வருத்தமடைகிறார் என்றே பொருள். இஸ்லாமில் இணைவதற்கு முன்னால் புரிந்திட்ட பாவங்களுக்காக ஒருவர் அதிகம் கவலையுறத் தேவையில்லை. தாயின் வயிற்றிலிருந்து அப்போதுதான் பிறந்த பச்சிளம் குழந்தையைப் போல், இஸ்லாமில் சேரும்போது அவரது பதிவேடு சுத்தமாக இருக்கின்றது.

## இஸ்லாமின் போதனைகளைப் பின்பற்றுவதன் முக்கியத்துவம்

*முஸ்லிமாக இருப்பதென்றால் என்னபொருள் என்பதை நீங்கள் தெரிந்துகொண்டு, உண்மையான இஸ்லாமிய நெறிமுறைகளின்படி வாழத் துவங்க வேண்டும். குர்ஆனும், ஹதீஸும் (நபிகளாரின் அமுதமொழிகள்) இஸ்லாமைப் பின்பற்ற வேண்டியதன் முக்கியத்துவத்தை வலியுறுத்துகின்றன. இறைவன் கூறுகின்றான்;*

> "நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் (அங்கீகரிக்கப்பட்ட) மார்க்கம் இஸ்லாம்தான்." *(அல் குர்ஆன் 3:19)*

> "இஸ்லாமை அன்றி (வேறொரு) மார்க்கத்தை எவரேனும் விரும்பினால் நிச்சயமாக அவரிடமிருந்து (அது) அங்கீகரிக்கப்படவே மாட்டாது. மறுமையில் அவர் நஷ்டமடைந்தவராகவே இருப்பார்." *(அல் குர்ஆன் 3:85)*

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் இணை, துணையற்றவன். முஹம்மது (ஸல்) அவர்கள், அவனின் தூதர் மற்றும் அடியார். ஈஸா நபி (அலை) அவர்கள், இறைவனின் தூதர். இறைவனின் வார்த்தைகள் அன்னை மர்யமின் மீது பொழியப்பட்டு அதன்மூலம் படைக்கப்பட்டவர் ('ஆகுக' என்று கூறி இறைவன் அவரைப் படைத்தான்); சொர்க்கம் என்பது உண்மை; அது போலவே நரக நெருப்பும் உண்மை என்று யார் சாட்சியம் பகர்கின்றாரோ அவரை அவரது செயல்களுக்கு ஏற்ப இறைவன் சொர்க்கத்தில் நுழையச் செய்வான்." (புகாரி)*

“அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என்று சாட்சி பகர்ந்து யார் இறைவனை நாடுகின்றாரோ அவரை நரகத்தில் நிரந்தரமாகத் தங்கியிருப்பதை விட்டும் இறைவன் தடுக்கின்றான்” என்று நபி (ஸல்) (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## முஸ்லிமாக இருப்பதற்கான சில முக்கிய அடிப்படையான விஷயங்கள்

நேரான செயல்களை ஏற்றுக் கொள்வதென்பது (ஷஹாதா / முஸ்லிமாக ஆகுவதற்கு வாக்குமூலம் அளிப்பது ஆகியன) கீழ்க்கண்ட இரண்டு நிபந்தனைகளைப் பூர்த்தி செய்வதன் அடிப்படையில் அமைவதாகும்.

1. செயல்களைச் செய்வதன் நோக்கம், முற்றிலும் அல்லாஹ்வுக்காகவே இருக்க வேண்டும். புகழ் பெறுவதற்காகவோ, புகழப்படுவதற்காகவோ செய்யக்கூடாது.

2. செயல்கள் அனைத்தும் அல்லாஹ்வின் இறுதித் தூதரான நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் சுன்னாவின் (வழிமுறை) அடிப்படையிலேயே நிறைவேற்றப்பட வேண்டும்.

நீங்கள் அறிந்த விஷயங்களுக்காகப் பதில் சொல்லக் கடமைப்பட்டுள்ளீர்கள். அறியாத விஷயங்களை அறிந்து கொள்வதற்காக நேரம் ஒதுக்கவும் கடமைப்பட்டுள்ளீர்கள்.

நீங்கள் ஒரு முஸ்லிமாக இல்லையென்றால், இஸ்லாமைப் பற்றி அறிந்து கொள்ள முயற்சிப்பதும், இஸ்லாமிய மார்க்கத்தில் உங்களுக்குப் புரியாத விஷயங்களைப் பற்றி

*மார்க்கத்தை அறிந்தவர்களிடம் விளக்கம் கேட்டுப் பெறுவதும் உங்கள் மீது கடமையாகும்.*

நீங்கள் அறிந்திருக்கவில்லையென்றால் அறிந்தவர்களிடம் கேளுங்கள்! (அல் குர்ஆன் 16 : 43)

*அல்லாஹ்வே நீதான் நேர்வழி காட்டுபவன். இந்நூலை வாசிப்பவர்களுக்கு உனது நேர்வழியை புரியவை! அவர்களை அந்த நேர்வழியில் செலுத்து!*

*எல்லாப்புகழும் உனக்கே! நீ நன்கறிந்தவன்! நன்கு செவியுறுபவன்!*

## இஸ்லாமிய மார்க்கம் குறித்து கூடுதல் விளக்கம் அறிய தொடர்பு கொள்ளுங்கள்!

### சென்னை

| | | |
|---|---|---|
| 1. அப்துல் காதிர் ரப்பானி | பிராட்வே, மண்ணடி | 9941 227 866 |
| 2. முஹம்மது இஸ்மாயில் | பிராட்வே, மண்ணடி | 9790 070 911 |
| 3. அப்துல்லாஹ் ஃபிர்தவ்ஸி | சென்னை | 9894 442 844<br>9841 777 873 |
| 4. யூசுஃப் | பெரம்பூர் | 9962 591 766 |
| 5. அன்சாரி | புதுப்பேட்டை | 9380 588 587 |
| 6. யாசின் | ரெட்ஹில்ஸ் | 8122 274 031 |
| 7. அப்துல் பாசித் | பல்லாவரம் | 9840 527 687 |
| 8. ரியாஸ் | மயிலாப்பூர் | 9841 277 944 |
| 9. நபி அஹமது | கிண்டி | 9884 021 483 |
| 10. ஜின்னாஹ் | தாம்பரம் | 9087 836 393 |
| 11. சலீம் | அரும்பாக்கம் | 9941 674 460 |
| 12. ஆரிஃப் | பட்டாளம் | 9884 484 455 |
| 13. அமீருத்தீன் | புதுப்பேட்டை | 9677 226 784 |
| 14. ரியாஸ் | அண்ணா நகர் | 9962 829 791 |
| 15. முஹம்மது அலி | ஆதம்பாக்கம் | 9789 017 964 |
| 16. ராஜா முஹம்மது | வேளச்சேரி | 7373 816 354 |
| 17. காதர் | திருவெற்றியூர் | 9841 983 770 |
| 18. ரியாஸ், குரோம்பேட்டை, | அஸ்தினாபுரம் | 9677 022 831 |
| 19. மீரான் | பூந்தமல்லி | 9840 180 370 |
| 20. இல்யாஸ் | மாஸ்கான் சாவடி | 9840 297 038 |
| 21. அப்பாஸ் | திருவெற்றியூர் | 8056 217 313 |

## காஞ்சிபுரம் மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. தாஜுத்தீன் | காஞ்சிபுரம் | 9624 920 790 |
| 2. மஹபூப் கான் | கல்பாக்கம் | 9894 145 692 |
| 3. இனாயத்துல்லாஹ் | அச்சிறுபாக்கம் | 9994 854 783 |

## வேலூர் மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. அப்துல்லாஹ் ஃபிர்தவ்ஸி | ஆம்பூர் | 9841 777 873, 9894 442 844 |
| 2. அப்துல் அக்பர் ஃபிர்தவ்ஸி | பேர்ணாம்பேட் | 9944 656 942 |
| 3. மன்சூர் உமரி | உமராபாத் | 9994 810 734 |
| 4. ஹுசைன் | வேலூர் | 8680 952 720 |

## கிருஷ்ணகிரி மாவட்டம்

| | | |
|---|---|---|
| முஹம்மது ரஃபிக் | கிருஷ்ணகிரி, ஒசூர் | 9092 316 039 |

## பெங்களுர்

| | | |
|---|---|---|
| முஹம்மது காசிம் | பெங்களுர் | +91 9886 001 357 |

## கோலார் தங்கவயல் (KGF)

| | | |
|---|---|---|
| பஷீர் அஹமது | (KGF) | +91 9845 217 262 |

## சேலம் மாவட்டம்

| | | |
|---|---|---|
| முஹம்மது | சேலம் | 9865 909 626 |

## திருப்பூர் மாவட்டம்

| | | |
|---|---|---|
| சதகதுல்லாஹ் உமரி | திருப்பூர் | 9894 115 625 |

## கோவை மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. அப்துர் ரஹ்மான் சதகி | கோவை | 9943 944 802 |
| 2. அப்துல் ஹமீது | கோவை | 9159 173 255 |

## நீலகிரி மாவட்டம்

| | | |
|---|---|---|
| ஜபருல்லாஹ் | ஊட்டி | 9443 102 225 |

## இராமநாதபுரம் மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. முஹம்மது அனஸ் | பரமக்குடி | 9543 799 295 |
| 2. ஜமால் முஹம்மது | இராமநாதபுரம் | 8489 306 288 |

## சிவகங்கை மாவட்டம்

| | | |
|---|---|---|
| காதர் | இளையான்குடி | 8122 289 541 |

## திருச்சி மாவட்டம்

| | | |
|---|---|---|
| அப்துல்லாஹ் | திருச்சி | 9443 530 039 |

## தேனி மாவட்டம்

| | | |
|---|---|---|
| அப்துல் கரீம் மன்பஈ | உத்தமபாளையம் | 9751 513 164 |

## கன்னியாகுமாரி மாவட்டம்

| | | |
|---|---|---|
| ரஃபிக் | நாகர்கோவில் | 9566 497 897 |

## திருநெல்வேலி மாவட்டம்

| | | |
|---|---|---|
| அப்துல் முத்தலிபு | தென்காசி | 9443 695 979 |

## தூத்துக்குடி மாவட்டம்

| | | |
|---|---|---|
| ஷேக் அலி ஃபிர்தவ்ஸி | காயல்பட்டிணம் | 7358 940 098 |

## விழுப்புரம் மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. அப்துல் கனி | விழுப்புரம் | 9790 290 002 |
| 2. அப்துல் காதர் ரப்பானி | செஞ்சி | 9941 227 866 |
| 3. யாசிர் ஃபிர்தவ்ஸி | விழுப்புரம் | 7418 510 586 |
| 4. உமர் ஃபாரூக் | விழுப்புரம் | 9840 735 847 |

## கடலூர் மாவட்டம்

| | | |
|---|---|---|
| 1. ராஜ் முஹம்மது மன்பஈ | நெல்லிக்குப்பம் | 9443 444 980 |
| 2. ஃபைசல் | கடலூர் O.T. | 9566 669 410 |

## பாண்டிச்சேரி

| | | |
|---|---|---|
| அப்துல் கனி | பாண்டிச்சேரி | 8124 671 610 |

■ ■ ■

